வெளியீடு 15

# திருக்குறள்

## (மூலம் முழுதும்)

திருவள்ளுவர்

அருளியது.



திருக்குறள்முனிசாமி

அவர்களால் பார்வையிடப்பட்டது

வெளியிடுவோர் —

திருக்குறள் அச்சகம் லிமிடெட்.,

கடலூர் (புதுநகர்)

1950.

முதல் பதிப்பு [விலை அணா பதினான்கு]

## முன்னுரை:--

திருவள்ளுவா அருளிய திருக்குறள உலகம
போறறும உயரிய பெருநூலாகத திகழகின்றது
இரண்டாயிரம ஆண்டுகடகு முன்னா தமிழகம
தநத அறிவுப்புதையலெனப் போறறபபடுகின்ற
இநநூலில வாழககை முன்னேறறததிறகும
இன்பத்திறகும அறிநதுணர வேண்டிய அனைத
தும அமைநதுளளதென்பது உலகறிநத உண
மையாகும.

மககளிடையே திருககுறள உணமை பர
வும நாள என்றுளோ அனறுளே உலகம இன
பததுறையில செலலும பொன்னுளாம தமிழ
ராகபபிறநத காம, உலகெஙகணும திருக்குறள
பரவ உழைகக வேண்டியது தலையாய கடை
மையாகக கொளளுதல வேண்டும எமது அச
சகததின் பதினைந்தாவது திருககுறள-வெளி
யீடாக இநநூல வருகினறது அன்பாகள ஆத
ரிப்பாாகளாக.

இஙஙனம,
திருக்குறள்முனிசாமி,
பொறுபபாளா

திருக்குறள் அச்சகம் லிமிடெட்.,

1-3-1950 கடலூா (புதுநகா)

# திருக்குறள் அதிகார வகராதி



# திருக்குறள்

# அறத்துப்பால்

| இயல்கள்: | அதிகாரம்: |
| --- | --- |
| 1. பாயிரவியல் | 1—4 |
| 2. இல்லறவியல் | 5—24 |
| 3. துறவறவியல் | 25—37 |
| 4. ஊழியல் | 38, |

## 1. கடவுள் வாழ்த்து.

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு 1

கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின். 2

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார் 3

வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்
யாண்டும் இடும்பை யில [தார்க்(கு) 4

இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு 5

பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார் 6

தனக்குவமை யிலலாதான் தாளசோநதாக்
மனககவலே மாறற லரிது [கலலான் 7

அறவாழி யநதணன் தாளசோநதாக கலலால
பிறவாழி நீநத லரிது. 8

கோளில பொறியிற குணமிலவே எண்குணத்
தாளை வணஙகாத தலே. [தான 9

பிறவிப் பெருஙகடல நீநதுவா நீநதாா
இறைவனடி சோா தாா. 10



## 2. வான் சிறப்பு.

வானின் றுலகம வழஙகி வருதலால
தானமிழத மென்றுணரற பாறறு. 1

துபபாாக்குத துப்பாய துப்பாககித துப்பாாக்
துப்பாய தூஉ மழை. [குத 2

விண்ணின்று பொய்ப்பின் விரிநீா வியனுலகத்
துளநின் றுடறறும பசி. 3

ஏரி னுழாஅா உழவா புயலென்னும
வாரி வளஙகுன்றிக கால. 4

கெடுப்பதூஉங் கெட்டாாககுச் சாாவாய்மற
எடுப்பதூஉ மெல்லா மழை [றாஙகே 5

விசும்பின் துளிவீழி னலலான்மற் றுஙகே
பசும்புல தலேகாண பரிது 6

நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி
தான்நல்கா தாகி விடின் 7

சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு. 8

தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின். 9

நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு 10



## 3. நீத்தார் பெருமை.

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிவு. 1

துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை எண்ணிக்கொண் டற்று. 2

இருமை வகைதெரிந்(து) ஈண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு 3

உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து. [பான் 4

ஐந்தவித்தா னாற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி. 5

செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார் 6

சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு 7

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும் 8

குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது. 9

அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான். [கு] 10



## 4. அறன்வலியுறுத்தல்.

சிறப்பீனுஞ் செல்வமு மீனும் அறத்தினூஉங்(கு)
ஆக்க மெவனோ உயிர்க்கு. 1

அறத்தினூஉங்(கு) ஆக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு. 2

ஒல்லும் வகையான் அறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல் 3

மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற. 4

அழுக்கா றவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்ற தறம். 5

அன்றறிவா மென்னா(து) அறஞ்செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை 6

அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுததாேனோ டூரநதான் இடை 7

வீழ்நாள் படாஅமை நன்றாறறின் அஃதொரு
வாழநாள் வழியடைக்குங கல். [வன் 8

அறததான் வருவதே இன்பமற றெல்லாம
புறதத புகழு மில 9

செயறபால தோரும அறனே யொருவற(கு)
உயறபால தோரும பழி. 10



## 5. இல்வாழ்க்கை.

இல்வாழவா னென்பான் இயலபுடைய மூவர்க்
நல்லாறறின் நின்ற துணை [கும 1

துறநதாாககுத் துவ்வா தவாககும இறந்தார்க்கும்
இலவாழவா னென்பான் துணை 2

தென்புலத்தா தெய்வம் விருநதொக்கல்
கைமபுலத்தா றோமபல் தலை. [தானென்றாங 3

பழியஞசிப் பாததூண உடைததாயின் வாழக
வழியெஞசல எஞஞான்று மில் [கை 4

அன்பும அறனும உடைத்தாயின் இலவாழககை பண்பும பயனும
அது 5

அறததாற்றின் இல்வாழககை ஆற்றின் புறத்
போஒயப பெறுவ தெவன். [தாறறில 6

இயலபினை் இலவாழ கககை வாழுபவ னென்
முயலவாரு ளெல்லாந தலே. [பான் 7

ஆறறின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழுககை
நோறபாரின் நோன்மை யுடைகது 8

அறனெனப் பட்டதே இல்வாழ்ககை அஃதும
பிறன்பழிப்ப திலலாயின் நன்று 9

வையததுளூ வாழ்வாஙகு வாழுபவன் வானுறை
தெய்வததுள வைககப படும. [யுந 10



## 6. வாழ்க்கைத்துணை நலம்

மனைத்தக்கமாண்புடையளாகிததறகொண்டான்
வளததககாள வாழக்கைதுணை. 1

மனைமாட்சி இலலாளகண் இலலாயின் வாழ்க்
கை எனைமாட்சித தாயினு மில 2

இலலதென் இலலவள மாண்பானால உளளதென் இலலவள
மாணுக கடை. 3 பெண்ணிற
பெருககக யாவுள கறபெனுந திண்மையுண் டாகப்
பெறின். 4 தெய்வந தொழா அள

கொழுநன் தொழுதெழுவாள பெயயெனப் பெயயு
மழை. 5 தற்காததுத தற்கொண்டான் பேணித
தகைசான் சொறகாததுச் சோாவிலாள் பெண், (ற 6

நிறைகாகருய காப்பெவன் செயயும மகளிா
நிறைகாகருய காப்பே தலை. 7

பெறறுன் பெறிறபெறுவா பெண்டிா பெருஞ புததேளிா
வாழு முலகு [சிறப்புப

புகழபுரிந(த) இலலிலோாக் கிலலை இகழவாாமுன்
ஏறுபோல பீடு நடை. 9
மஙகல மென்ப மனைமாட்சி மறறதன்
நன்கலம நன்மக்கட பேறு, 10



## 7. மக்கட்பேறு.

பெறுமவறறுள யாமறிவ திலலை அறிவறிநத
மககடபே றலல பிற 1
எழுபிறப்புந தீயவை தீண்டா பழிபிறஙகாப
பண்புடை மககட் பெறின் 2
தமபொரு ளெனபதம மககள அவாபொருள
தநதம வினையான வரும. 3
அமிழதினும ஆறற இனிதேதம மககள
சிறுகை அளாவிய கூழ 4
மககளமெய் தீண்ட லுடறகின்பம மறறவா

சொற்கேட்டல் இன்பஞ் செவிக்கு 5

குழலினி(து) யாழினி(து) என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர் 6

தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல் 7

தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது 8

ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய் 9

மகன்தந்தைக் காற்றும் உதவி இவன்தந்தை
என்னோற்றான் கொல்லெனுஞ் சொல் 10



---

## 8. அன்புடைமை.

அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும் 1

அன்பிலா ரெல்லாந் தமக்குரியர் அன்புடையார்
என்பு முரியர் பிறர்க்கு. 2

அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்(கு)
என்போ டியைந்த தொடர்பு 3

அன்பீனும் ஆர்வ முடைமை அதுவீனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு 4

அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு 5

அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை, 6

என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம் 7

அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரந்தளிர்த் தற்று. 8

புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப் பன்பி லவர்க்கு 9

அன்பின் வழிய(து) உயிர்நிலை அஃதிலார்க்(கு)
என்புதோல் போர்த்த உடம்பு 10



---

## 9. விருந்தோம்பல்.

இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்
தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்டு 1

விருந்து புறததாத தானுணடல சாவா
மருநதெனினும வேணடறபாற றனறு 2
வருவிருநது வைகலும ஓமபுவான் வாழகைகை
பருவநது பாழபடுத லினறு 3
அகனமாநது செயயா ளுறையும முகனமாநது
நலவிருந தோமபுவான் இல 4
விதது மிடலவேண்டும கொலலோ விருநதோமபி
மிசசின் மிசைவான் புலம 5
செல்விருந தோமபி வருவிருநது பாாததிருப
நலவிருநது வானத தவாககு [பான 6
இணைதுணைத தென்பதொன் றிலலை விருநதின்
துணைததுணை வேளவிப பயன 7
பரிநதோமபிப பறறறறே மென்பா விருந
வேளவி தலைப்படா தாா [தோமபி 8
உடைமையு ளின்மை விருநதோமபல ஓமபா
மடமை மடவாாக ளுணடு 9
மோப்பககுழையும அனிசசம முகநதிரிநது
நோககக குழையும விருநது 10



## 10. இனியவைகூறல்

இன்சொலா லீரம் அளைஇப் படிறிலவாஞ் செம்பொருள
கண்டார்வாய்ச் சொல். 1

அகனமர்ந் தீதலின் நன்றே முகனமர்(து)
இன்சொல னாகப் பெறின். 2

முகததா னமர்நதினிது நோக்கி யகத்தானும்
இன்சொ லினதே யறம். 3

துன்புறூஉந துவ்வாமை இல்லாகும் யாமாட் இன்புறூஉ
மின்சொ லவாக்கு. [டும் 4 பணிவுடைய
னின்சொல னாதல் ஒருவற்கு அணியல்ல மற்றுப் பிற.
r 5 அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை நாடி
இனிய சொலின். 6 நயனீன்று
நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல். 7
சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும் இம்மையு
மின்பந் தரும். 8 இன்சொ
லினிதீன்றல் காண்பா னெவன் வன்சொல் வழங்கு
வது. [கொலோ 9 இனிய உளவாக இன்னாத
கூறல் ,கனியிருப்பக் காய்கவாந் தற்று.
10



---

## 11 செய்ந்நன்றியறிதல்

செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது. 1

காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது. 2

பயன்றூக்கார் செய்த உதவி நயன்றூக்கின்
நன்மை கடலிற் பெரிது. 3

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணை
கொளவர் பயன்றெரி வார. [யாக் 4

உதவி வரைதத்தன் றுதவி உதவி
செயப்பட்டார் சால்பின் வரைதது. 5

மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துட் டுப்பாயார் நட்பு. 6

எழுமை எழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவா நட்பு. 7

நன்றி மறபபது நன்றன்று நன்றல்ல(து)
அன்றே மறப்பது நன்று. 8

கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும். 9

எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டாம் உய்
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. [விலலை 10

# 12. நடுவுநிலைமை

தகுதி யெனவொன்று நன்றே பகுதியாற்
பாற்பட் டொழுகப் பெறின். 1

செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி
எச்சத்திற் கேமாப் புடைத்து. 2

நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல். 3

தக்கார் தகவில ரென்ப தவரவர்
எச்சத்தாற் காணப் படும். 4

கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி. 5

கெடுவல்யா னென்ப தறிகதன் நெஞ்சம்
நடுவொரீஇ அல்ல செயின். 6

கெடுவாக வையா துலகம் நடுவாக
நன்றிக்கட் டங்கியான் றாழ்வு. 7

சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்
தொருபாற் கோடாமை சான்றோர்க் கணி. 8

சொற்கோட்ட மில்லது செப்பம் ஒருதலையா
உட்கோட்ட மின்மை பெறின். 9

வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின். 10

## 13. அடக்கமுடைமை

அடக்கம் அமரரு ளுய்க்கும் அடங்காமை
ஆரிரு ளுய்த்து விடும். 1

காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனினூஉங் கில்லை உயிர்க்கு. 2

செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்து
ஆற்றி னடங்கப் பெறின். 3

நிலையிற் றிரியா தடங்கியான் றோற்றம் மலையினும்
மாணப் பெரிது. 4 எல்லார்க்கு நன்றாம்
பணிதல் அவருள்ளுஞ் செல்வர்க்கே செல்வம் தகைத்து.
5 ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றின் எழுமையு
மேமாப் புடைத்து. 6 யாகாவா ராயினும்
நாகாக்க காவாக்காற் சோகாப்பர் சொல்லிழுக்குப்
பட்டு. 7 ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய
னுண்டாயின் நன்றாகா தாகி விடும்.
8

தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினாற் சுட்ட வடு. 9

கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
அறம்பார்க்கு மாற்றி னுழைந்து. 10

# 14. ஒழுக்கமுடைமை

ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும். 1

பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கந் தெரிந்தோம்பித்
தேரினு மஃதே துணை. 2

ஒழுக்க முடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும். 4

மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும் 4

அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன்
ஒழுக்க மிலான்கண் உயர்வு. [றில்லை 5

ஒழுக்கத்தி னொல்கா ருரவோர் இழுக்கத்தின்
ஏதம் படுபாக் கறிந்து. 6

ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை இழுக்கத்தின்
எய்துவ ரெய்தாப் பழி. 7

நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கந் தீயொ
என்றும் இடும்பை தரும். [ழுக்கம் 8

ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல். 9

உலகத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார். 10

# 15. பிறனில்விழையாமை

பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை
அறம்பொருள் கண்டார்க ணில். [ஞாலத்து 1

அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில். 2

விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில்
தீமை புரிந்தொழுகு வார். 3

எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணை
தேரான் பிறனில் புகல். [யும் 4

எளிதென இல்லிறப்பா னெய்துமெஞ் ஞான்
விளியாது நிற்கும் பழி. [றும் 5

பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவா மில்லிறப்பான் கண். 6

அறனியலா னில்வாழ்வா னென்பான் பிறனிய
பெண்மை நயவா தவன். [லாள் 7

பிறன்மனை நோக்காத பேராண்மை சான்
அறனொன்றோ ஆன்ற வொழுக்கு. [றோர்க்(கு) 8

நலக்குரியார் யாரெனின் நாமநீர் வைப்பிற்
பிறற்குரியா டோள்டோயா தார். 9

அறன்வரையா னல்ல செயினு பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று. 10

## 16. பொறையுடைமை

அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை. 1
பொறுத்த லிறப்பினை என்றும் அதனை
மறத்த லதனினும் நன்று. 2
இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மை
வன்மை மடவார்ப் பொறை. [யுள் 3
நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறை
போற்றி யொழுகப் படும். [யுடைமை 4
ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து. 5
ஒறுத்தார்க் கொருநாளை இன்பம் பொறுத்
பொன்றுந் துணையும் புகழ். [தார்க்கு 6
திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்(து)
அறனல்ல செய்யாமை நன்று. 7
மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தம்
தகுதியான் வென்று விடல். 8
துறந்தாரிற் றூய்மை யுடைய ரிறந்தார்வாய்
இன்னாச்சொல் நோற்கிற் பவர். 9
உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரின் பின். 10

# 17. அழுக்காறாமை

ஒழுக்காறாக் கொள்க ஒருவன்றன் நெஞ்சத்(து)
அழுக்கா றிலாத இயல்பு. 1

விழுப்பேற்றி னஃதொப்ப தில்லையார் மாட்டும்
அழுக்காற்றின் அன்மை பெறின். 2

அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்
பேணா தழுக்கறுப் பான். [கம் 3

அழுக்காறறி னல்லவை செய்யா ரிழுக்காற்றின்
ஏதம் படுபாக் கறிந்து. 4

அழுக்கா றுடையார்க் கதுசாலும் ஒன்னார்
வழுக்கியுங் கேடீன் பது. 5

கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉ மின்றிக் கெடும். 6

அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும். 7

அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும். 8

அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும். 9

அழுக்கற் றகன்றாரு மில்லைஅஃ தில்லார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில். 10

## 18. வெஃகாமை

நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமு மாங்கே தரும். 1

படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர். 2

சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர். 3

இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர். 4

அஃகி யகன்ற அறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின். 5

அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள்
பொல்லாத சூழக் கெடும. [வெஃகிப் 6

வேண்டற்க வெஃகியா மாக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன். 7

அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃ
வேண்டும் பிறன்கைப் பொருள. [காமை 8

அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேருந்
திறனறிந் தாங்கே திரு. 9

இறலீனு மெண்ணாது வெஃகின் விறலீனும்
வேண்டாமை என்னுஞ் செருக்கு. 10

## 19 புறங்கூறாமை.

அறங்கூறு னல்ல செயினும் ஒருவன்
புறங்கூறா னென்ற லினிது. 1

அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
புறனழீஇப் பொய்த்து நகை. 2

புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாதல்
அறங்கூறு மாக்கந் தரும். 3

கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்
முன்னின்று பின்னோக்காச் சொல். [லற்க 4

அறஞ்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறஞ்
புன்மையாற் காணப் படும். [சொல்லும் 5

பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளும்
திறன்றெரிந்து கூறப் படும். 6

பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாட றேற்றா தவர். 7

துன்னியார் குற்றமுந் தூற்றும் மரபினார்
என்னைகொல் ஏதிலார் மாட்டு. 8

அறநோக்கி யாற்றுங்கொல் வையம் புறநோக்கிப்
புன்சொ லுரைப்பான் பொறை. 9

ஏதிலார் குற்றம்போல் தங்குற்றங் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னு முயிர்க்கு 10



## 20. பயனிலசொல்லாமை

பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
எல்லாரு மெள்ளப் படும். 1

பயனில பல்லார்முற் சொல்லல் நயனில
நட்டார்கட் செய்தலிற் றீது. 2

நயனில னென்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கு முரை. 3

நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப்
பண்பில்சொற் பல்லா ரகத்து. 4

சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின். 5

பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல். 6

நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று. 7

அரும்பய னாயும் அறிவினார் சொல்லார்
பெரும்பய னில்லாத சொல். 8

பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த
மாசறு காட்சி யவர். 9

சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல். 10



## 21. தீவினையச்சம்

தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு. 1

தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும். 2

அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல். 3

மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு. 4

இலனென்று தீயவை செய்யற்க செய்யின்
இலனாகும் மற்றும் பெயர்த்து. 5

தீப்பால தன்னை

தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால
யடல்வேண்டா தான். 6

எனைப்பகை உற்றாரு முய்வர் வினைப்பகை
வீயாது பின்சென் றடும். 7

தீயவை செய்தார் கெடுதல் நிழறன்னை
வீயா தடியுறைந் தற்று. 8

தன்னைத்தான் காதல னாயின் எனைத்தொன்றுந்
துன்னற்க தீவினைப் பால். 9

அருங்கேட னென்ப தறிக மருங்கோடித்
தீவினை செய்யா னெனின். 10

# 22. ஒப்புரவறிதல்

கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு என்னாற்றுங்
கொல்லோ உலகு. 1 தாளாற்றித் தந்த
பொருளெல்லாம் * தக்கார்க்கு வேளாண்மை செய்தற
பொருட்டு. 2

புகதே ளுலகத்தும் இண்டும் பெறலரிதே
ஒப்புரவி னல்ல பிற. 3

ஒத்த தறிவா னுயிர்வாழுவான் மற்றையான் செத்தாருள
வைக்கப் படும். 4 ஊருணி நீர்நிறைந்
தறறே உலகவாம்
பேரறி வாளன் றிரு. 5 பயன்மர
முள்ளூர்ப் பழுததற்றாற் செலவம் நயனுடை யான்கட்
படின். 6 மருந்தாகித தப்பா மரததற்றாற்
செல்வம்
பெருநதகை யான்கட் படின். 7 இடனில்
பருவத்தும் ஒப்புரவிற் கொல்கார் கடனறி காட்சி யவர்.
8 நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர
செய்யா தமைகலா வாறு. 9 ஒப்புரவி
னல்வருங் கேடெனின் அஃதொருவன் விற்றுக்கோட்
டக்க துடைத்து. 10

22

# 23. ஈகை

வறியார்க்கொன் றீவதே ஈகைமற் றெல்லாங்

குறியெதிர்ப்பை நீர துடைத்து. 1

நல்லா றெனினுங் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று. 2

இலனென்னு மெவ்வ முரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே யுள. 3

இன்னா திரக்கப் படுதல் இரந்தவர்
இன்முகங் காணு மளவு. 4

ஆற்றுவா ராற்றல் பசியாற்றல் அப்பசியை
மாற்றுவா ராற்றலிற் பின். 5

அற்றா ரழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி. 6

பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்ட லரிது. 7

ஈத்துவக்கு மின்பம் அறியார்கொல் தாமுடை
வைத்திழக்கும் வன்க ணவர். [மை 8

இரத்தலி னின்னாது மன்ற நிரப்பிய
தாமே தமிய ருணல். 9

சாதலி னின்னாத தில்லை இனிததூஉம்
ஈத லியையாக் கடை. 10



## 24. புகழ்

ஈத லிசைபட வாழ்தல் அதுவல்ல(து)
ஊதிய மில்லை உயிர்க்கு. 1

உரைப்பா ருரைப்பவை யெல்லாம் இரப்பார்க்
இவார்மே னிற்கும் புகழ். [கொன்(று) 2

ஒன்று உலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றுது நிற்பதொன் றில். 3

நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
போற்றுது புத்தே ளுலகு. 4

நத்தம்போற் கேடும் உளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது. 5

தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றேன்றுமை நன்று. 6

புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
இகழ்வாரை நோவ தெவன். 7

வசையென்ப வையத்தார்க் கெல்லாம் இசை எச்சம்
பெறுஅ விடின். [யென்னும் 8 வசையிலா

வண்பயன் குன்றும் இசையிலா யாக்கை பொறுத்த
நிலம். 9

வசையொழிய வாழ்வாரே வாழ்வார் இசை
வாழ்வாரே வாழா தவர். [யொழிய 10

24

## 25. அருளுடைமை

அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்
பூரியார் கண்ணு முள. [செல்வம் 1

நல்லாற்று னாடி அருளாள்க பல்லாற்று(ல்)
தேரினு மஃதே துணை. 2

அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை இருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல். 3

மன்னுயி ரோம்பி அருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை. 4

அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கு
மல்லன்மா ஞாலங் கரி. 5

பொருணீங்கிப் பொச்சாந்தா ரென்பர் அருள்
அல்லவை செய்தொழுகு வார். [நீங்கி 6

அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லாகி யாங்கு. 7

பொருளற்றார் பூப்ப ரொருகால் அருளற்றார்
அற்றார்மற் றாத லரிது. 8

தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற்
அருளாதான் செய்யும் அறம். [தேரின் 9

வலியார்முற் றன்னை நினைக்கதான் தன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து. 10



## 26. புலான்மறுத்தல்

தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்
எங்ஙனம் ஆளும் அருள். 1

பொருளாட்சி போற்றாதார்க் கில்லை அருளாட்சி
ஆங்கில்லை ஊன்றின் பவர்க்கு. 2

படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா
உடல்சுவை யுண்டார் மனம். [தொன்றன் 3

அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல். 4

உண்ணாமை யுள்ள துயிர்நிலை ஊனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு. 5

தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில். [யாரும் 6

உண்ணாமை வேண்டும் புலால் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின். 7

செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணார்
உயிரிற் றலைப்பிரிந்த ஊன். 8

அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று. 9

கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிருந் தொழும். 10

26

## 27. தவம்

உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய் அற்றே.
தவத்திற் குரு. [யாமை 1
தவமுந் தவமுடையார்க் காகும் அவமதனை
அஃதிலார் மேற்கொள் வது. 2

துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்
மற்றை யவர்கள தவம். [கொல் 3
ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும் எண்ணிற்
றவத்தான் வரும். 4 வேண்டிய
வேண்டியாங் கெய்தலாற் செய்தவம் ஈண்டு முயலப்
படும். 5 தவஞ்செய்வார் தங்கருமஞ்
செய்வார்மற் றல் அவஞ்செய்வா ராசையுட் பட்டு.
[லார் 6 சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு. 7 தன்னுயிர்
தானறப் பெற்றானை ஏனைய
மன்னுயி ரெல்லாந் தொழும். 8 கூற்றங்
குதித்தலுங் கைகூடும் நோற்றலின் ஆற்றல் தலைப்பட்
டவர்க்கு. 9 இலர்பல ராகிய காரணம்
நோற்பார்
சிலர்பலர் நோலா தவர். 10

27

## 28. கூடாவொழுக்கம்

வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்து மகத்தே நகும். 1.
வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ் தானறி
குற்றப் படின். [சந் 2 வலியி
னிலேமையான் வல்லுருவம் பெற்றம் புலியின்றேல்
போர்த்துமேய்ந் தற்று. 3 தவமறைந் தல்லவை
செய்தல் புதன்மறைந்து வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று.
4 பற்றற்றே மென்பார் படிற்றொழுக்கம் எற்றெற் றேதம்
பலவுந் தரும். [றென் 5 நெஞ்சிற் றுறவார்
துறந்தார்போல வஞ்சித்து வாழ்வாரின் வன்கணா ரில்,
6
புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து. 7
மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர் 8
கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன வினைபடு
பாலாற் கொளல். 9 மழித்தலும் நீட்
டலும் வேண்டா உலகம்
பழித்த தொழித்து விடின். 10

28

## 29. கள்ளாமை

எள்ளாமை வேண்டுவா னென்பான் எனைத்
கள்ளாமை காக்கதன் நெஞ்சு. [தொன்றுங் 1
உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல். 2

களவினா லாகிய ஆக்கம் அளவிறந்
தாவது போலக் கெடும். 3

களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும். 4

அருள்கருதி அன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்க ணில். 5

அளவின்க ணின்றொழுக லாற்றார் களவின்கட்
கன்றிய காத லவர். 6

களவென்னுங் காரறி வாண்மை அளவென்னும்
ஆற்றல் புரிந்தார்க ணில். 7

அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்குங்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு. 8

அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்றா தவர். 9

கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு. 10

29

## 30. வாய்மை

வாய்மை எனப்படுவ தியாதெனின் யாதொன்
தீமை யிலாத சொலல். [றுந் 1

பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின். 2

தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும். 3

உள்ளத்தாற் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்து ளெல்லா முளன். 4

மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை. 5

பொய்யாமை யன்ன புகழில்லை எய்யாமை
எல்லா அறமுந் தரும். 6

பொய்யாமை பொய்யாமை யாற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று. [பிற 7

புறந்தூய்மை நீரா னமையும் அகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும். 8

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு. 9

யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்
வாய்மையி னல்ல பிற. [தொன்றும் 10



## 31. வெகுளாமை.

செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பா னல்லி
காக்கிலென் காவாக்கா லென். [டத்துக் 1

செல்லா இடத்துச் சினந்தீது செல்லிடத்தும்
இல்லதனிற் றீய பிற. 2

மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
பிறத்த லதனான் வரும். 3

நகையு
பகையு

முவகையுங் கொல்லுஞ் சினத்திற்
முளவோ பிற. 4

தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்
தன்னையே கொல்லுஞ் சினம். [கால் 5

சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி இன
ஏமப் புணையைச் சுடும். [மென்னும் 6

சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று. 7

இணரெரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று. 8

உள்ளிய வெல்லா முடனெய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி யெனின். 9

இறந்தா ரிறந்தா ரனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை. 10



## 32. இன்னாசெய்யாமை.

சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னு
செய்யாமை மாசற்ருர் கோள். 1

கறுத்தின்னு செய்தவக் கண்ணும் மறுத்தின்னு
செய்யாமை மாசற்ருர் கோள. 2

செய்யாமற் செற்ருர்க்கு மின்னுத செய்தபின்
உய்யா விழுமந் தரும். 3

இன்னுசெய் தாரை யொறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்து விடல். 4

அறிவினு னுகுவ துண்டோ பிறிதினேய்
தந்நோய்போற் போற்ருக் கடை. 5

இன்னு எனத்தா னுணர்ந்தவை துன்னுமை
வேண்டும் பிறன்கட் செயல. 6

எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கும் மனத்
மாணுசெய் யாமை தலை. [தானும் 7

தன்னுயிர்க் கின்னுமை தானறிவா னென்
மன்னுயிர்க் கின்னு செயல். [கொலோ 8

பிறர்க்கின்னு முற்பகற் செய்யிற் றமக்கின்னு
பிற்பகற் ருமே வரும். 9

நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்
நோயின்மை வேண்டு பவர். [செய்யார் 10



## 33. கொல்லாமை.

அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும். 1

பகுத்துண்டு பல்லுயி ரோம்புதல் நூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை. 2

ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று. 3

நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்
கொல்லாமை சூழும் நெறி. [றுங் 4

நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் றலை. 5

கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்
செல்லா துயிருண்ணுங் கூற்று. [நாண்மேற் 6

தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை. 7

நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
கொன்றாகு மாக்கங் கடை. 8

கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து. 9

உயிருடம்பி னீக்கியா ரென்ப செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர். 10

33

## 34. நிலையாமை.

நில்லா தவற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை. 1

கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்
போக்கு மதுவிளிந் தற்று. [வம் 2

அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல். 3

நாளென ஒன்றுபோற் காட்டி உயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின். 4

நாச்செற்று விக்குண்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும். 5

நெருந லுளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு. 6

ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல. 7

குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு. 8

உறங்குவது போலுஞ் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு. 9

புக்கி லமைந்தின்று கொல்லோ உடம்பினுட்
டுச்சி லிருந்த உயிர்க்கு. 10



## 35. துறவு.

யாதினின் யாதனி னீங்கியான் நோதல்
அதனி னதனின் இலன். 1

வேண்டினுண் டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டியற் பால பல. 2

அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்
வேண்டிய வெல்லா மொருங்கு. [டும் 3

இயல்பாகும் நோன்பிற்கொன் றின்மை யுடை
மயலாகும் மற்றும் பெயர்த்து. [மை 4

மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்ப
லுற்றார்க் குடம்பு மிகை. [றுக்க 5

யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோ
குயர்ந்த உலகம் புகும். [ர்க் 6

பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு. 7

தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர். 8

பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும். 9

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. 10

## 36. மெய்யுணர்தல்.

பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும் மருளானும்
மாணாப் பிறப்பு. 1

இருணீங்கி இன்பம் பயக்கும் மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு. 2

ஐயத்தி
வானம்
னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
நணிய துடைத்து. 3

ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே மெய்யுணா
விலலா தவாக்கு. 4

எப்பொரு
ளெத்தன்மைத் தாயினும் அப்பொ மெய்ப்பொருள
காண்ப தறிவு. [ருள் 5

கற்றீண்டு மெய்ப்பொருள்
கண்டார் தலைப்படு மற்றீண்டு வாரா நெறி.
[வர் 6

ஓர்த்துளள முள்ள துணரின் ஒருதலையாப்
பேர்த்துளள வேண்டா பிறப்பு. 7

பிறப்பென்னும் பேதமை நீங்கச் சிறப்பென் செம்பொ
ருள் காண்ப தறிவு. [னுஞ் 8

சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்
சார்தரா சார்தரு நோய். [துச் 9

காமம்
வெகுளி மயக்க மிவைமூன்றன்
நாமங் கெடக்கெடும் நோய். 10

## 37 அவாவறுத்தல்.

அவாவென்ப எல்லா உயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து. 1

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும். 2

வேண்டாமை யன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
யாண்டு மஃதொப்ப தில். 3

தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும். 4

அற்றவ ரென்பா ரவாவற்றார் மற்றையார்
அற்றாக அற்ற திலர். 5

அஞ்சுவ தோரும் அறனே ஒருவனை
வஞ்சிப்ப தோரு மவா. 6

அவாவினை யாற்ற அறுப்பிற் றவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும். 7

அவாவில்லார்க் கில்லாகுந் துன்பமஃ துண்டேல்
தவாஅது மேன்மேல் வரும். 8

இன்ப மிடையறா தீண்டும் அவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின். 9

ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும். 10



## 38. ஊழ்.

ஆகூழாற் றோன்று மசைவின்மை கைப்பொ
போகூழாற் றோன்றும் மடி. [ருள் 1

பேதைப் படுக்கு மிழவூழ் அறிவகற்றும்
ஆகலூ ழுற்றக் கடை. 2

நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை யறிவே மிகும். 3

இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு. 4

நல்லவை எல்லாஅந் தீயவாந் தீயவும்
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு. 5

பரியினு மாகாவாம் பாலல்ல உய்த்துச்
சொரியினும் போகா தம. 6

வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது. 7

துறப்பார்மற் றுப்புர வில்லார் உறற்பால
ஊட்டா கழியு மெனின். 8

நன்றாங்கா னல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவ தெவன். 9

ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும். 10

# திருக்குறள்

## பொருட்பால்



| இயல்கள்: | | அதிகாரம்: |
|---|---|---|
| 1. | அரசியல் | 39—63 |
| 2. | அங்கவியல் | 64—95 |
| 3. | ஒழிபியல் | 96–108 |



### 39. இறைமாட்சி

படைகுடி கூழமைச்சு நட்பர
உடையா னரசரு ளேறு. 1

அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு. 2

தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலனாள் பவற்கு. 3

அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு. 4

இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு. 5

காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல்
மீக்கூறும் மன்ன னிலம். 6

இன்சொலா லீத்தளிக்க வல்லாற்குத் தன்சொ
றான்கண் டனைத்திவ் வுலகு. [லாற் 7

முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்
இறையென்று வைக்கப் படும். [கட்கு 8

செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை
கவிகைக்கீழ்த் தங்கு முலகு. [வேந்தன் 9

கொடையளி செங்கோல் குடியோம்ப னான்கும்
உடையானாம் வேந்தர்க் கொளி. 10

39

## 40. கல்வி

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக. 1

எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு. 2

கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர். 3

உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில். 4

உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர். 5

தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு. 6

யாதானும் நாடாமா ஊராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு. 7

ஒருமைக்கட் டான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையு மேமாப் புடைத்து. 8

தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார். 9

கேடில் விழுச்செல்வங் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை. 10

## 41. கல்லாமை

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல். 1

கல்லாதான் சொற்கா முறுதன் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற றற்று. 2

கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முற்
சொல்லா திருக்கப் பெறின். 3

கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார். 4

கல்லா ஒருவன் றகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும். 5

உளரென்னும் மாத்திரைய ரல்லாற் பயவாக்
களரனையர் கல்லா தவர். 6

நுண்மா ணுழைபுல மில்லான் எழில்நலம்
மண்மாண் புனைபாவை யற்று. 7

நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கட் பட்ட திரு. 8

மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்
கற்றா ரனைத்திலர் பாடு. [துங் 9

விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர். 10



## 42. கேள்வி.

செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வம் அச்
செல்வத்து ளெல்லாந் தலை. [செல்வஞ் 1

செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும். 2

செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவின்
ஆன்றாரோ டொப்பர் நிலத்து. 3

கற்றில னாயினுங் கேட்க அஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை. 4

இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
ஒழுக்க முடையார்வாய்ச் சொல். 5

எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும். 6

பிழைத்துணர்ந்தும் பேதைமைசொல்லா ரிழைத்
தீண்டிய கேள்வி யவர். [துணர்ந் 7

கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற்
றோட்கப் படாத செவி. 8

நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயின ராத லரிது. 9

செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினு மென். 10



## 43. அறிவுடைமை.

அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்க லாகா அரண். 1

சென்ற இடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு. 2

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. 3

எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்பதறிவு. 4

உலகந் தழீஇய தொட்பம் மலர்தலுங்
கூம்பலு மில்ல தறிவு. 5

எவ்வ துறைவ துலகம் உலகத்தோ(டு)
அவ்வ துறைவ தறிவு. 6

அறிவுடையா ராவ தறிவார் அறிவிலார்
அஃதறி கல்லா தவர். 7

அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில். 8

எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை
அதிர வருவதோர் நோய். 9

அறிவுடையா ரெல்லா முடையார் அறிவிலார்
என்னுடைய ரேனு மிலர். 10



## 44. குற்றங்கடிதல்.

செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து. 1

இவறலும் மாண்பிறந்த மானமும் மாணா
உவகையு மேத மிறைக்கு. 2

தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணை
கொள்வர் பழிநாணு வார். [யாக் 3

குற்றமே காக்க பொருளாக் குற்றமே
அற்றந் தரூஉம் பகை. 4

வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்
வைத்தூறு போலக் கெடும். [னர் 5

தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பின்
என்குற்ற மாகு மிறைக்கு. 6

செயற்பால செய்யா திவறியான் செல்வம்
உயற்பால தன்றிக் கெடும். 7

பற்றுள்ள மென்னு மிவறன்மை எற்றுள்ளும்
எண்ணப் படுவதொன் றன்று. 8

வியவற்க எஞ்ஞான்றுந் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை. 9

காதல காத லறியாமை உய்க்கிற்பின்
ஏதில ஏதிலார் நூல். 10



## 45. பெரியாரைத் துணைக்கோடல்.

அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல். 1

உற்றநோய் நீக்கி உறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல். 2

அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல். 3

தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை. 4

சூழ்வாரகண் ணாக ஒழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல். 5

தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில் 6

இடிக்குந் துணையாரை ஆள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர். 7

இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும். 8

முதலிலார்க் கூதிய மில்லை மதலையாஞ்
சார்பிலார்க் கில்லை நிலை. 9

பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல். 10

45

## 46. சிற்றினஞ்சேராமை.

சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும். 1

நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்(கு)
இனத்தியல்ப தாகும் அறிவு. 2

மனத்தானும் மாந்தர்க் குணர்ச்சி இனத்தானும்
இன்னா னெனப்படுஞ் சொல். 3

மனத்து ளதுபோலக் காட்டி ஒருவற்கு
இனத்துள தாகு மறிவு 4

மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்
இனந்தூய்மை தூவா வரும் 5

மனந்தூயார்க் கெச்சநன் றாகும் இனந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை. 6

மனநலம் மன்னுயிர்க் காக்கம் இனநலம்
எல்லாப் புகழுந் தரும். 7

மனநலம் நன்குடைய ராயினுஞ் சான்றோர்க்
கினநல மேமாப் புடைத்து. 8

மனநலத்தி னாகும் மறுமைமற் றஃதும்
இனநலத்தி னேமாப் புடைத்து. 9

நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉ மில். 10

46

## 47. தெரிந்து செயல்வகை.

அழிவதூஉம் ஆவதூஉ மாகி வழிபயக்கும்
ஊதியமுஞ் சூழ்ந்து செயல். 1

தெரிந்த இனத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்
அரும்பொருள் யாதொன்று மில். [வார்க்கு 2

ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
ஊக்கா ரறிவுடை யார். 3

தெளிவி லதனைத் தொடங்கா ரிளிவென்னும்
ஏதப்பா டஞ்சு பவர். 4

வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோ ராறு. 5

செய்தக்க அல்ல செயக்கெடுஞ் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும். 6

எண்ணித் துணிக கருமந் துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கு. 7

ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும். 8

நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை. 9

எள்ளாத எண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு
கொள்ளாத கொள்ளா துலகு. 10

47

## 48. வலியறிதல்.

வினைவலியுந் தன்வலியும் மாற்றான் வலியுந்
துணைவலியுந் தூக்கிச் செயல். 1

ஒல்வ தறிவ தறிந்ததன் கட்டங்கிச்
செல்வார்க்குச் செல்லாத தில். 2

உடைத்தம் வலியறியா ரூக்கத்தி னூக்கி
இடைக்கண் முறிந்தார் பலர். 3

அமைந்தாங் கொழுகா னளவறியான் றன்னை
வியந்தான் விரைந்து கெடும். 4

பீலிபெய் சாகாடும் அச்சிறு மப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின். 5

நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும். 6

ஆற்றி னளவறிந் தீக அதுபொருள்
போற்றி வழங்கு நெறி. 7

ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை
போகா றகலாக் கடை. 8

அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும். 9

உளவரை தூக்காத ஒப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும் 10



## 49. காலமறிதல்

பகல்வெல்லுங் கூகையைக் காக்கை இகல்வெல்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது. [லும் 1

பருவத்தோ டொட்ட ஒழுகல் திருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு. 2

அருவினை யென்ப உளவோ கருவியாற்
கால மறிந்து செயின். 3

ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்
கருதி இடத்தாற் செயின். 4

காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர். 5

ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து. 6

பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்
துள்வேர்ப்ப ரொள்ளி யவர். [பார்த் 7

செறுநரைக் காணிற் சுமக்க இறுவரை
காணிற் கிழக்காந் தலை. 8

எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே
செய்தற் கரிய செயல். 9

கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து. 10

49

## 50. இடனறிதல்

தொடங்கற்க எவ்வினையு மெள்ளற்க முற்றும்
இடங்கண்ட பின்னல் லது. 1

முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கு மரண்
ஆக்கம் பலவுந் தரும். [சேர்ந்தாம் 2

ஆற்றாரு மாற்றி யடுப இடனறிந்து
போற்றார்கட் போற்றிச் செயின். 3

எண்ணியா ரெண்ண மிழப்ப ரிடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின். 4

நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்
நீங்கி னதனைப் பிற. 5

கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடும்

நாவாயு மோடா நிலத்து. 6

அஞசாமை யல்லாற் றுணைவேண்டா எஞ்
எண்ணி இடத்தாற் செயின். [சாமை 7

சிறுபடையான் செல்லிடஞ் சேரி னுறுபடை
ஊக்க மழிந்து விடும். [யான் 8

சிறைநல ன்ஞ் சீரு மிலரெனினும் மாந்தர்
உறைநிலத்தோ டொட்ட லரிது. 9

காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா
வேலாண் முகத்த களிறு. 10

50

## 51. தெரிந்துதெளிதல்

அறம்பொரு ளின்ப முயிரச்சம நான்கின் றிறந்தெரிந்து
தேறப் படும.

குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பரியும் அரியகற்
காணுடையான் கட்டே தெளிவு. இன்மை

றுசற்றூர் கண்ஹுந தெரியுங்கால்
யரிதே வெளிறு. 3

குணநாடிக் குறறமு நாடி அவற்றுள
மிகைநாடி மிகக கொளல். 4

பெருமைக்கு மேனேச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல். 5

அற்றாரைத் தேறுதல் ஓம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி. 6

காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும். 7

தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா இடும்பை தரும். 8

தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபின்
தேறுக தேறும் பொருள். 9

தேரான் றெளிவுந் தெளிந்தான்கண் ஐயுறவுந்
தீரா இடும்பை தரும். 10

51

## 52. தெரிந்துவினையாடல்

நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த
தன்மையா னாளப் படும். 1

வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
ஆராய்வான் செய்க வினை. 2

அன்பறிவு தேற்ற மவாவின்மை இந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு. 3

எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகை
வேறாகும் மாந்தர் பலர். [யான் 4

அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினைதான்
சிறந்தானென் றேவற்பாற் றன்று. 5

செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த உணர்ந்து செயல். 6

இதனை இதனா லிவன்முடிக்கு மென்றாய்ந்து
அதனை யவன்கண் விடல். 7

வினைக்குரிமை நாடிய பின்றை அவனை
அதற்குரிய னாகச் செயல். 8

வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
நினைப்பானை நீங்குந் திரு. 9

நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு. 10

52

## 53. சுற்றந்தழால்

பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள. 1

விருப்பருச் சுற்ற மியையின் அருப்பரு
ஆக்கம் பலவும் தரும். 2

அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று. 3

சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன். 4

கொடுத்தலு மின்சொலு மாற்றின் அடுக்கிய
சுற்றத்தாற் சுற்றப் படும். 5

பெருங்கொடையான் பேணான் வெகுளியவனின்
மருங்குடையார் மாநிலத் தில். 6

காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமும்
அன்னநீ ரார்க்கே யுள. 7

பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர். 8

தமராகித் தற்றுறந்தார் சுற்ற மமராமைக்
காரண மின்றி வரும். 9

உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்
இழைத்திருந் தெண்ணிக் கொளல். 10

# 54. பொச்சாவாமை

இறந்த வெகுளியிற் றீதே சிறந்த
உவகை மகிழ்ச்சியிற சோர்வு. 1

பொச்சாப்புக் கொல்லும் புகழை அறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு 2

பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத்
தெப்பானூ லோர்க்குந் துணிவு. 3

அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு. 4

முன்னுறக் காவா திழுக்கியான் தன்பிழை
பின்னூ றிரங்கி விடும். 5

இழுக்காமை யார்மாட்டு மென்றும் வழுக்காமை
வாயி னதுவொப்ப தில். 6

அரியவென் றாகாத இல்லைபொச் சாவாக்
கருவியாற் போற்றிச் செயின். 7

புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டுஞ் செய்
இகழ்ந்தார்க் கெழுமையு மில். [யாது 8

இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து. 9

உள்ளிய தெய்த லெளிதுமன் மற்றுந்தான்
உள்ளிய துள்ளப் பெறின். 10

# 55. செங்கோன்மை

ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டுந்
தேர்ந்துசெய் வஃதே முறை. 1

வானோக்கி வாழு முலகெல்லாம் மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி. 2

அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல். 3

குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கு முலகு. 4

இயல்புளிக் கோலோச்சும் மன்னவ னாட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு. 5

வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉங் கோடா தெனின். 6

இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கும் முட்டாச் செயின். 7

எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தாற் றானே கெடும. 8

குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில். 9

கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல்
களைகட் டதனொடு நேர். [பைங்கூழ் 10

# 56. கொடுங்கோன்மை

கொலைமேற்கொண் டாரிற் கொடிதே அலைமேற்
கொண் டல்லவை செய்தொழுகும் வேந்து. 1

வேலொடு நின்றா னிடுவென் றதுபோலுங்
கோலொடு நின்றா னிரவு. 2

நாடொறு நாடி முறைசெய்யா மன்னவன்
நாடொறும் நாடு கெடும். 3

கூழுங் குடியு மொருங்கிழக்குங் கோல்கோடிச்
சூழாது செய்யு மரசு. 4

அல்லற்பட் டாற்றா தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை. 5

மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேன்
மன்னுவா மன்னர்க் கொளி. 6

துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்தன்
அளியின்மை வாழு முயிர்க்கு. 7

இன்மையி னின்னா துடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின். 8

முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி
ஒல்லாது வானம் பெயல். 9

ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின். 10

## 57. வெருவந்தசெய்யாமை

தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தா
லொத்தாங் கொறுப்பது வேந்து. 1

கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்
நீங்காமை வேண்டு பவர். 2

வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயின்
ஒருவந்த மொல்லைக் கெடும். 3

இறைகடிய னென்றுரைக்கும் இன்னாச்சொல் வேந்தன்
உறைகடுகி ஒல்லைக் கெடும். 4

அருஞ்செவ்வி இன்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்ன துடைத்து. 5

கடுஞ்சொல்லன் கண்ணில னாயின் நெடுஞ்செல்வம்
நீடின்றி யாங்கே கெடும். 6

கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்தன்
அடுமுரண் தேய்க்கும் அரம். 7

இனத்தாற்றி யெண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
சீறிற் சிறுகுந் திரு. 8

செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும். 9

கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோ லதுவல்ல
தில்லை நிலக்குப் பொறை. 10

# 58. கண்ணோட்டம்

கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை
உண்மையா னுண்டிவ் வுலகு. 1

கண்ணோட்டத் துள்ள துலகிய லஃதிலார்
உண்மை நிலக்குப் பொறை. 2

பண்ணென்னும் பாடற் கியைபின்றேற் கண்
கண்ணோட்ட மில்லாத கண். [ணென்னுங் 3

உளபோன் முகத்தெவன் செய்யு மளவினாற்
கண்ணோட்ட மில்லாத கண். 4

கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட மஃதின்றேற்
புண்ணென் றுணரப் படும். 5

மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர். 6

கண்ணோட்ட மில்லவர் கண்ணிலர் கண்ணுடை
கண்ணோட்ட மின்மையு மில. [யார் 7

கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை யுடைத்திவ் வுலகு. 8

ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணுங்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை. 9

பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர். 10



## 59. ஒற்றாடல்

ஒற்று முரைசான்ற நூலு மிவையிரண்டுந்
தெற்றென்க மன்னவன் கண். 1

எல்லார்க்கு மெல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்
வல்லறிதல் வேந்தன் றொழில். [றும் 2

ஒற்றினா னொற்றிப் பொருடெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்த தில். 3

வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்
கனைவரையு மாராய்வ தொற்று. [றாங் 4

கடாஅ உருவொடு கண்ணஞ்சா தியாண்டும்
உகாஅமை வல்லதே யொற்று. 5

துறந்தார் படிவத்த ராகி இறந்தாராய்ந்
தென்செயினுஞ் சோர்வில தொற்று. 6

மறைந்தவை கேட்கவற் றாகி அறிந்தவை
ஐயப்பா டில்லதே யொற்று. 7

ஒற்றொற்றித் தந்த பொருளையு மற்றுமோர்
ஒற்றினா லொற்றிக் கொளல். 8

ஒற்றொற் றுணராமை யாள்க உடன்மூவர்
சொற்றொக்க தேறப் படும். 9

சிறப்பறிய ஓற்றின்கட் செய்யற்க செய்யிற்
புறப்படுத்தா ஞகும் மறை. 10

59

---

## 60. ஊக்கமுடைமை

உடைய ரெனப்படுவ தூக்கமஃ தில்லார்
உடைய துடையரோ மற்று. 2 உள்ள
முடைமை உடைமை பொருளுடைமை நில்லாது நீங்கி
விடும். 2 ஆக்க மிழந்தேமென்
றல்லாவா ருக்கம்
ஒருவந்தங் கைத்துடை யார். 3 ஊக்க
மதர்வினைச் செல்லு மசைவிலா
ஆக்க முடையா னுழை. 4 வெள்ளத்
தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு. 5 உள்ளுவ
தெல்லா முயுர்வுள்ளல் மற்றது
தள்ளினுந் தள்ளாமை நீர்த்து. 6
சிதைவிடத் தொல்கா ருரவோர் புதையம்பிற் பட்டுப்பா
டூன்றுங் களிறு. 7 உள்ள மிலாதவ
ரெய்தா ருலகத்து
வள்ளிய மென்னுஞ் செருக்கு. 8 பரியது
கூர்ங்கோட்ட தாயினும் யானை

வெரூஉம் புலிதாக் குறின். 9

உரமொருவற் குள்ள வெறுக்கையஃ தில்லார் மரமக்க
ளாதலே வேறு. 10

60

## 61. மடியின்மை

குடியென்னுங் குன்றா விளக்கம் மடியென்னும்
மாசூர மாய்ந்து கெடும். 1

மடியை மடியா ஒழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர். 2

மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியுந் தன்னினு முந்து. 3

குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து
மாண்ட உஞற்றி லவர்க்கு. 4

நெடுநீர் மறவி மடிதுயி னான்கும்
கெடுநீரார் காமக் கலன். 5

படியுடையார் பற்றமைந்தக் கண்ணும் மடி
மாண்பய னெய்த லரிது [யுடையார் 6

இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட உஞற்றி லவர். 7

மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் னொன்னார்க்
கடிமை புகுத்தி விடும். 8

குடியாண்மை யுள்வந்த குற்ற மொருவன்
மடியாண்மை மாற்றக் கெடும். 9

மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான் றாஅய
தெல்லா மொருங்கு. 10

61

## 62. ஆள்வினையுடைமை

அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும். 1

வினைக்கண் வினைகெட லோம்பல் வினைக்குறை
தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு. 2

தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக்கு. 3

தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும். 4

இன்பம் விழையான் வினைவிழைவான் றன்கேளிர்
துன்பந் துடைத்தூன்றுந் தூண். 5

முயற்சி திருவினை யாக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும். 6

மடியுளாண் மாமுகடி யென்ப மடியிலான்
தாளுளா டாமரையி னாள். 7

பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந்து
ஆள்வினை இன்மை பழி. 8

தெய்வத்தா னாகா தெனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும். 9

ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர். 10

62

## 63. இடுக்கணழியாமை

இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில். 1

வெள்ளத் தனைய இடும்பை அறிவுடையான்
உள்ளத்தி னுள்ளக் கெடும். 2

இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்
கிடும்பை படாஅ தவர். 3

மடுத்தவா யெல்லாம் பகடன்னா னுற்ற
இடுக்க ணிடர்ப்பா டுடைத்து. 4

அடுக்கி வரினும் அழிவிலா னுற்ற
இடுக்க ணிடுக்கட் படும். 5

அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென்
றோம்புதல் தேற்ரு 'தவர். 6

இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்
கையாருக் கொள்ளாதா மேல். 7

இன்பம் விழையான் இடும்பை யியல்பென்
றுன்ப முறுத லிலன். [பான் 8

இன்பத்து ளின்பம் விழையாதான் றுன்பத்துட்
டுன்ப முறுத லிலன். 9

இன்னாமை இன்ப மெனக்கொளின் ஆகுந்தன்
ஒன்னார் விழையுஞ் சிறப்பு. 10

63

## 64. அமைச்சு

கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யும்
அருவினையு மாண்ட தமைச்சு. 1

வன்கண் குடிகாத்தல் கற்றறித லாள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு. 2

பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தாப்
பொருததலும் வல்ல தமைச்சு. 3

தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு 4

அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்
திறனறிந்தான் றேர்ச்சித் துணை. [றுந் 5

மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை. 6

செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்
தியற்கை யறிந்து செயல். 7

அறிகொன் றறியா னெனினு முறுதி
உழையிருந்தான் கூறல் கடன். 8

பழுதெண்ணும் மந்திரியிற் பக்கத்துட் டெவ்வோ
ரெழுபது கோடி யுறும். 9

முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறப்பா டிலாஅ தவர். 10



## 65. சொல்வன்மை

நாநல மென்னும் நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று. 1

ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு. 2

கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல். 3

திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும்
பொருளு மதனினூஉங் கில. 4

சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்
வெல்லுஞ்சொ லின்மை யறிந்து. [சொல்லை 5

வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொற் பயன்
மாட்சியின் மாசற்றார் கோள். [கோடன் 6

சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சா னவனை
இகல்வெல்லல் யார்க்கு மரிது. 7

விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின். 8

பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்ல றேற்றா தவர். 9

இணரூழ்த்து நாறா மலரனையர் கற்ற
துணர விரித்துரையா தார். 10



## 66. வினைத்தூய்மை

துணைநல மாக்கந் தரூஉம் வினைநலம்
வேண்டிய வெல்லாந் தரும். 1

என்று மொருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை. 2

ஓஒதல் வேண்டும் மொளிமாழ்குஞ் செய்வினை
யாஅது மென்னு மவர். 3

இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர். 4

எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று. 5

ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை. 6

பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை. 7

கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதாம்
முடிந்தாலும் பீழை தரும். 8

அழக்கொண்ட வெல்லாம் அழப்போ மிழப்பி
பிற்பயக்கும் நற்பா லவை. [னும் 9

சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல் பசுமட்
கலத்துணீர் பெய்திரீ இ யற்று. 10



## 67. வினைத்திட்பம்

வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்ப
மற்றைய வெல்லாம் பிற. 1

ஊறொரா லுற்றபி னொல்காமை இவ்விரண்டின்
ஆறென்ப ராய்ந்தவர் கோள். 2

கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை இடைக்
எற்றா விழுமந் தரும். [கொட்கின் 3

சொல்லுதல் யார்க்கு மெளிய அரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல். 4

வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன் கண்ணூறெய்தி
யுள்ளப் படும். [கண் 5 எண்ணிய

எண்ணியாங் கெய்துப எண்ணியார் திண்ணிய ராகப்

பெறின். 6 உருவுகண் டெள்ளாமை
வேண்டு முருள்பெருங் கச்சாணி யன்னா ருடைத்து.
[தேர்க் 7

கலங்காது கண்ட வினைகட் டுளங்காது
தூக்கங் கடிந்து செயல். 8

துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை. 9

எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்
வேண்டாரை வேண்டா துலகு. [பம் 10



## 68. வினைசெயல்வகை

சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் அத்துணிவு
தாழ்ச்சியுட் டங்குதற் தீது. 1

தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை. 2

ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே ஒல்லாக்காற்
செல்லும்வாய் நோக்கிச் செயல். 3

வினைபகை யென்றிரண்டி னெச்சம் நினையுங்
தீயெச்சம் போலத் தெறும். [காற் 4

பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்தும்
இருள்தீர எண்ணிச் செயல். 5

முடிவு மிடைபூறும் முற்றியாங் கெய்தும்
படுபயனும் பாாததுச் செயல். 6

செய்வினை செய்வான் செயன்முறை அவ்வினை
யுள்ளறிவா னுள்ளங் கொளல். 7

வினையான் வினையாக்கிக் கோடல் நனைகவுள்
யானையால் யானையாத் தற்று. 8

நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
ஒட்டாரை யொட்டிக் கொளல். 9

உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெ
கொள்வா பெரியார்ப் பணிந்து. [றிற் 10



## 69. தூது

அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு. 1

அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப் கின்றி
யமையாத மூன்று. [பார்க் 2 நூலாரு

ணூல்வல்ல னுகுதல் வேலாருள் வென்றி
வினையுரைப்பான் பண்பு. 3 அறிவுரு வாராய்ந்த

கல்வியிம் மூன்றன் செறிவுடையான் செல்க வினைக்கு.
4 தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி நன்றி
பயப்பதாந் தூது. 5

கற்றுக்கண் ணஞ்சான் செலச்சொல்லிக்காலத் றக்க
தறிவதாந் தூது. [தாற் 6 கடனறிந்து
காலங் கருதி யிடனறிந்
தெண்ணி யுரைப்பான் றலை. 7 தூய்மை
துணைமை துணிவுடைமை இம்மூன்றி வாய்மை
வழியுரைப்பான் பண்பு. [ன் 8 விடுமாற்றம்
வேந்தர்க் குரைப்பான் வடுமாற்ற வாய்சோரா வன்க
ணவன். [ம் 9 இறுதி பயப்பினு
மெஞ்சா திறைவற் குறுதி பயப்பதாந் தூது.
10



## 70. மன்னரைச்சேர்ந்தொழுகல்

அகலா தணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார். 1

மன்னர் விழைப விழையாமை மன்னரான்
மன்னிய வாக்கந் தரும். 2

போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்
தேற்றுதல் யார்க்கு மரிது.

செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழு
ஆன்ற பெரியா ரகத்து. [கல் 4

எப்பொருளு மோரார் தொடரார்மற் றப்பொ
விட்டக்காற் கேட்க மறை. [ருளை 5

குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல். 6

வேட்பன சொல்லி வினையில எஞ்ஞான்றுங்
கேட்பினுஞ் சொல்லா விடல். 7

இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற
ஒளியோ டொழுகப் படும். 8

கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத
துளக்கற்ற காட்சி யவர். [செய்யார் 9

பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும். 10

70

## 71. குறிப்பறிதல்

கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்றும்
மாறாநீர் வையக் கணி. [றும் 1

ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல். 2 குறிப்பிற்

குறிப்புணர் வாரை உறுப்பினுள் யாது கொடுத்துங்
கொளல். 3 குறித்தது கூறாமைக் கொள்

வாரோ டேனை யுறுப்போ ரனையரால் வேறு.
4 குறிப்பிற் குறிப்புணரா வாயின் உறுப்பினுள் என்ன

டீபத்தவோ கண். 5 அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங் கடுத்தது காட்டும் முகம்.
6 முகத்தின் முதுக்குறைந்த துண்டோ உவப்பி காயினுந் தான்முந் துறும். [னுங் 7 முகநோக்கி நிற்க அமையும் அகநோக்கி • உற்ற துணர்வார்ப் பெறின்.
8 பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்கும் வகைமை யுணர்வார்ப் பெறின். [கண்ணின் 9 நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங் கண்ணல்ல தில்லை பிற.
[காற் 10

. 71

# 72. அவையறிதல்

அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொல்லின்
றொகையறிந்த தூய்மை யவர். 1

இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக் சொல்
நடைதெரிந்த நன்மை யவர். [லின் 2

அவையறியாற் சொல்லன்மேற் கொள்பவர்
வகையறியார் வல்லதூஉ மில் [சொல்லின் 3

ஒளியார்முன் றொள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல். 4

நன்றென் றவற்றுள்ளும் நன்றே முதுவருண்
முந்து கிளவாச் செறிவு. 5

ஆற்றி னிலேதளர்ந் தற்றே வியன்புலம்
ஏற்றுணர்வார் முன்ன ரிழுக்கு. 6

கற்றறிந்தார் கல்வி விளங்கும் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து. 7

உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன்
பாத்தியு ணீர்சொரிந் தற்று. 8

புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க
நன்கு செலச்சொல்லு வார் [நல்லவையுள் 9

அங்கணத்து ளுக்க அமிழ்தற்றாற் றங்கணத்த
ரல்லார்முற் கோட்டி கொளல். 10



## 73. அவையஞ்சாமை

வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லி
றொகையறிந்த தூய்மை யவர். [ன் 1

கற்றாருட் கற்றா ரெனப்படுவர் கற்றார்முற்
கற்ற செலச்சொல்லு வார். 2

பகையகத்துச் சாவா ரெளிய ரரியர்
அவையகத் தஞ்சா தவர். 3

கற்றார்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
மிக்காருண் மிக்க கொளல். 4

ஆற்றி னளவறிந்து கற்க அவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு. 5

வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு
நுண்ணவை யஞ்சு பவர்க்கு. [நூலொடென் 6

பகையகத்துப் பேடிகை யொள்வாள் அவைய
தஞ்சு மவன்கற்ற நூல். [கத் 7

பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையுள்
நன்கு செலச்சொல்லா தார். 8

கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்து
நல்லா ரவையஞ்சு வார். 9

உளரெனினு மில்லாரோ டொப்பர் களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார். 10



## 74. நாடு

தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு. 1

பெரும்பொருளாற் பெட்டக்க தாகி யருங்கேட்
லாற்ற விளைவது நாடு. [டா 2

பொறையொருங்கு மேல்வருங்காற் றங்கி யிறை
கிறையொருங்கு நேர்வது நாடு. [வற் 3

உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு. 4

பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும்வேந்தலைக்
கொல்குறும்பு மில்லது நாடு. [குங் 5

கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டிற் றலை. 6

இருபுனலும் வாய்ந்த மலேயும் வருபுனலும்
வல்லரணு நாட்டிற் குறுப்பு. 7

பிணியின்மை செல்வம் விளேவின்ப மேமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து. 8 நாடென்ப

நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு. 9 ஆங்கமை

வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு. 10

74

## 75. அரண்

ஆற்று பவர்க்கு மரண்பொரு ளஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள். 1

மணிநீரும் மண்ணும் மலேயும் அணிநிழற்
காடு முடைய தரண். 2

உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கின்
அமைவர ணென்றுரைக்கு நூல். 3

சிறுகாப்பிற் பேரிடத்த தாகி உறுபகை
ஊக்க மழிப்ப தரண். 4

கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி யகத்
நிலேக்கெளிதாம் நீர தரண். [தார் 5 எல்லாப்

பொருளு முடைத்தா யிடத்துவும்
நல்லா ளுடைய தரண். 6

முறறியு முற்ரு தெறிந்து மறைப்படுத்தும்
பற்றற் கரிய தரண். 7

முற்ருற்றி முற்றி யவரையும் பற்ருற்றிப்
பற்றியார் வெல்வ தரண். 8

முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
வீறெய்தி மாண்ட தரண். 9

எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி யில்லார்க
ணில்ல தரண். 10

75

## 76. பொருள்செயல்வகை

பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள். 1

இல்லாரை எல்லாரு மெள்ளுவர் செல்வரை
எல்லாருஞ் செய்வர் சிறப்பு. 2

பொருளென்னும் பொய்யா விளக்கம் இருள
எண்ணிய தேயத்துச் சென்று. [றுக்கும் 3

அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள். 4

அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல். 5

உறுபொருளு முல்கு பொருளுந்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள். 6

அருளென்னு மன்பின் குழவி பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு. 7

குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்
துண்டாகச் செய்வான் வினை. [தொன் 8

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரிய தில். 9

ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்
ஏனை யிரண்டு மொருங்கு. [பொருள் 10

76

## 77. படைமாட்சி

உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாந் தலை. 1

உலைவிடத் தூறஞ்சா வன்கண் டொலைவிடத்துத்
தொல்படைக் கல்லா லரிது. 2

ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும். 3

அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை. 4

கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை. 5

மறமான மாண்ட வழிச்செலவு தேற்ற
மெனநான்கே ஏமம் படைக்கு. 6

தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்குந் தன்மை யறிந்து. 7

அடற்றகையு மாற்றலு மில்லெனினுந் தானை
படைத்தகையாற் பாடு பெறும். 8

சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையு
மில்லாயின் வெல்லும் படை. 9

நிலைமக்கள் சால உடைத்தெனினுந் தானை
தலைமக்க ளில்வழி யில். 10



## 78. படைச்செருக்கு

என்னைமுன் நில்லன்மின் றெவ்விர் பலரென்னை
முன்னின்று கல்நின் றவர். 1

கான முயலெய்த அம்பினில் யானை
பிழைத்தவே லேந்த லினிது. 2

பேராண்மை என்ப தறுகணொன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றத னெஃகு. 3

கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும். 4

விழித்தகண் வேல்கொண் டெறிய அழித்திமைப்
பின்
ஓட்டன்றோ வன்க ணவர்க்கு. 5

விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் நாளை யெடுத்து. 6

சுழலு மிசைவேண்டி வேண்டா உயிரார்
கழலயாப்புக் காரிகை நீர்த்து. 7

உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன்
செறினுஞ்சீர் குன்ற லிலர். 8

இழைத்த திகவாமைச் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர். 9

புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா
டிரந்துகோட் டக்க துடைத்து. 10

78

# 79. நட்பு

செயற்கரிய யாவுள நட்பி னதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு.

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு.

நவிறொறு நூனயம் போலும் பயிறொறும்
பண்புடை யாளர் தொடர்பு. 3

நகுதற் பொருட்டன்று நட்டன், மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு. 4

புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும். 5

முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு. 6

அழிவி னவைநீக்கி ஆறுய்த் தழிவின்கண்
அல்ல லுழப்பதாம் நட்பு. 7

உடுக்கை யிழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு. 8

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
ஒல்லும்வா யூன்றும் நிலை. 9

இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று
புனையினும் புல்லென்னு நட்பு. 10

1

2

## 80. நட்பாராய்தல்

நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு. 1

ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடை
தான்சாந் துயரந் தரும். [முறை 2

குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
இனனு மறிந்தியாக்க நட்பு. 3

குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு. 4

அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல். 5

கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல். 6

ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல். 7

உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க
அல்லற்க ணாற்றறுப்பார் நட்பு.

கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை அடுங்காலை
உள்ளினு முள்ளஞ் சுடும். 9

மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்தும்
ஒருவுக வொப்பிலார் நட்பு. 10

## 81. பழைமை

பழைமை யெனப்படுவ தியாதெனின் யாதுங் கிழமையைக்
கீழ்ந்திடா நட்பு. 1
நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்
குப்பாதல் சான்றோர் கடன். 2

பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை. 3
விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகை கேளாது
நட்டார் செயின். [யாற் 4 பேதைமை
யொன்றோ பெருங்கிழமை என்று நோதக்க நட்டார்
செயின். [ணர்க 5 எல்லைக்க ணின்றார் துறவார்
தொலைவிடத்துந் தொல்லைக்க ணின்றார் தொடர்பு.
6 அழிவந்த செய்யினும் அன்பறா ரன்பின் வழிவந்த
கேண்மை யவர். 7
கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்
நாளிழுக்க நட்டார் செயின். [கு 8

கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையு முலகு. 9

விழையார் விழையப் படுப பழையார்கட்
பண்பிற் றலைப்பிரியா தார். 10



## 82. தீ நட்பு

பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்ற லினிது. 1

உறினட் டறினொரூஉ மொப்பிலார் கேண்மை
பெறினு மிழப்பினு மென். 2

உறுவது சீர்தூக்கு நட்பும் பெறுவது
கொள்வாருங் கள்வரும் நேர். 3

அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா வன்னார்
தமரிற் றனிமை தலை. 4

செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
எய்தலி னெய்தாமை நன்று. 5

பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையார்
ஏதின்மை கோடி யுறும். 6

நகைவகைய ராகிய நட்பிற் பகைவராற்
பத்தடுத்த கோடி யுறும். 7

ஒல்லுங் கரும முடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல். 8

கனவினு மின்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு. 9

எனைத்துங் குறுகுத லோம்பன் மனைக்கெழீஇ
மன்றிற் பழிப்பார் தொடர்பு. 10



## 83. கூடா நட்பு

சீரிடங் காணி னெறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு. 1

இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும். 2

பலநல்ல கற்றக் கடைத்து மனநல்லர்
ஆகுதன் மாணார்க் கரிது. 3

முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா
வஞ்சரை யஞசப் படும். 4

மனத்தி னமையா தவரை எனைத்தொன்றுஞ்
சொல்லினாற் றேறற்பாற் றன்று. 5

நட்டார்போல் நல்லவை சொல்லினும் ஒட்டார்
ஒல்லை யுணரப் படும். [சொல் 6

சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில் தீங்கு
குறித்தமை யான். [வணக்கம் 7

தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்
அழுதகண் ணீரு மனைத்து. [னார் 8

மிகச்செய்து தம்மெள்ளு வாரை நகச்செய்து
நட்பினுட் சாப்புல்லற் பாற்று. 9

பகைநட்பாங் காலம் வருங்கால் முகநட்
டகநட் பொரீஇ விடல். 10



## 84. பேதைமை

பேதைமை யென்பதொன் றியாதெனின் ஏதங்
டூதியம் போக விடல். [கொண் 1

பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல். 2

நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில். 3

ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில். 4

ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையுந்
தான்புக் கழுந்து மளறு. 5

பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின். 6

ஏதிலா ராரத் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வ முற்றக் கடை. 7

மையல் லொருவன் களித்தற்றாற் பேதைதன்
கையொன் றுடைமை பெறின். 8

பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில். 9

கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல். 10

34

## 85. புல்லறிவாண்மை

அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை
இன்மையா வையா துலகு. 1

அறிவிலா னெஞ்சுவந் தீதல் பிறிதியாது
மில்லை பெறுவான் தவம். 2

அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்குஞ் செய்த லரிது. 3

வெண்மை யெனப்படுவ தியாதெனின் ஒண்மை
உடையம்யா மென்னுஞ் செருக்கு. 4

கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉ மையந் தரும். 5

அற்றம் மறைத்தலோ புல்லறிவு தம்வயிற்
குற்றம் மறையா வழி. 6

அருமறை சோரும் அறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு. 7

ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய். 8

காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான்
கண்டானாந் தான்கண்ட வாறு. 9

உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும். 10



## 86. இகல்

இகலென்ப எல்லா வுயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கு நோய். 1

பகல்கருதிப் பற்றா செயினும் இகல்கருதி
இன்னாசெய் யாமை தலை. 2

இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவலில்லாத்
தாவில் விளக்கந் தரும். 3

இன்பத்துள் இன்பம் பயக்கும் இகலென்னுந்
துன்பத்துள் துன்பங் கெடின். 4

இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்குந் தன்மை யவர். 5

இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலும் நணித்து. 6

மிகன்மேவன் மெய்ப்பொருள் காணா ரிகன்மே
இன்னா அறி வினவர். [வல் 7

இகலிற் கெதிர்சாய்த லாக்கம் அதனை
மிகலூக்கி னூக்குமாங் கேடு. 8

இகல்காணா னாக்கம் வருங்கா லதனை
மிகல்காணுங் கேடு தரற்கு. 9

இகலானா மின்னாத வெல்லாம் நகலானாம்
நன்னய மென்னுஞ் செருக்கு. 10



## 87. பகைமாட்சி

வலியார்க்கு மாறேற்ற லோம்புக ஓம்பா
மெலியார்மேன் மேக பகை. 1

அன்பில னான்ற துணையிலன் தான்துவ்வான்
என்பரியு மேதிலான் றுப்பு. 2

அஞ்சு மறியா னமைவில னீகலான்
தஞ்ச மெளியன் பகைக்கு. 3

நீங்கான் வெகுளி நிறையில னெஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கு மெளிது. 4

வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழி
பண்பிலன் பற்றார்க் கினிது. [நோக்கான் 5

காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணாமை பேணப் படும். 6

கொடுத்துங் கொளல்வேண்டு மன்ற அடுத்தி
மாணாத செய்வான் பகை. [ருந்து 7

குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்
கினனிலனா மேமாப் புடைத்து. 8

செறுவார்க்குச் சேணிகவா வின்ப மறிவிலா
வஞ்சும் பகைவர்ப் பெறின். 9

கல்லான் வெகுளுஞ் சிறுபொரு ளெஞ்ஞான்று
மொல்லானை யொல்லா தொளி. 10



## 88. பகைத்திறந்தெரிதல்

பகையென்னும் பண்பி லதனை யொருவ
னகையேயும் வேண்டற்பாற் றன்று. 1

வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை. 2

ஏமுற் றவரினு மேழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன். 3

பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை
றகைமைக்கட் டங்கிற் றுலகு. [யாளன் 4

தன்றுணையின்றாற் பகையிரண்டாற் றனொருவ
னின்றுணையாக் கொள்கவற்றி னொன்று. 5

தேறினுந் தேறா விடினு மழிவின்கட்
டேறான் பகாஅன் விடல். 6

நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து. 7

வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கட் பட்ட செருக்கு. 8

இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து. 9

உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார். 10

88

## 89. உட்பகை

நிழனீரு மின்னாத வின்னா தமர்நீரு
மின்னாவா மின்னா செயின். 1

வாள்போற் பகைவரை அஞ்சற்க; அஞ்சுக
கேள்போற் பகைவர் தொடர்பு. 2

உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும். 3

மனமாண வுட்பகை தோன்றி னினமாண
வேதம் பலவுந் தரும். 4

உறன் முறையா னுட்பகை தோன்றி னிறன்

னேதம் பலவுந் தரும். [முறையா 5
ஒன்றுமை யொன்றியார் கட்படி னெஞ்ஞான்
பொன்றுமை யொன்ற லரிது. [றும் 6
செப்பின் புணர்ச்சிபோற் கூடினும் கூடாதே
யுட்பகை யுற்ற குடி. 7
அரமபொருத பொன்போலத் தேயும் உரம்
துட்பகை யுற்ற குடி. - [பொரு 8
எட்பக வன்ன சிறுமைததே யாயினு
முட்பகை யுளளதாங கேடு. 9
உடம்பா டிலாதவர் வாழக்கை குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று. 10

89

# 90. பெரியாரைப் பிழையாமை.

ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்
போற்றலு ளெலலாந் தலை. 1
பெரியாரைப் பேணு தொழுகிற பெரியாரா
பேரா விடும்பை தரும். 2
கெடல்வேண்டிற் கேளாது செய்க அடல்வேண்டி
னாறறு பவாக ணிழுக்கு. 3
கூற்றத்தைக் கையால் விளித்தறறு லாற்றுவாரக்
காற்றுதா ரின்னு செயல. 4
யாண்டுசென் றியாண்டு முளராகா ர வெந
வேநது செறப்பட் டவா. [துப்பின் 5
எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார. 6
வகைமாண்ட வாழக்கையும் வான்பொருளு
தகைமாண்ட தக்கார செறின் [மென்னாம 7

குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு
நின்றன்னா மாய்வா நிலத்து. 8

ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும். 9

இறந்தமைந்த சார்புடைய ராயினு முய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின். 10



## 91. பெண்வழிச் சேறல்.

மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினை
வேண்டாப் பொருளு மது. [விழைவார் 1

பேணாது பெண்விழைவா னாக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும். 2

இல்லாள்கட் டாழ்ந்த இயல்பின்மை எஞ்ஞான்
நல்லாருள் நாணுத் தரும். [றும் 3

மனையாளை யஞ்சு மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்த லின்று. 4

இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்றும்
நல்லார்க்கு நல்ல செயல். 5

இமையாரின் வாழினும் பாடிலரே யில்லா
ளமையார்தோ ளஞ்சு பவர். 6

பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி
பெண்ணே பெருமை யுடைத்து. [ஹுடைப் 7

கட்டார குறைமுடியார நன்றற்றூர் நன்னுத
பெட்டாங் கொழுகு பவர். [லாள் 8

அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல செய்வார்க ணில். 9

எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்
பெண்சேர்ந்தாம பேதைமையில். [ஞான்றும 10



## 92. வரைவின்மகளிர்.

அன்பின் விழையார் பொருள்விழையு மாய்
ரின்சொ லிழுக்குத் தரும். [தொடியா 1

பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்றூக்கி நள்ளா விடல். 2

பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்ட
லேதில் பிணந்தழீஇ யற்று. [றையி 3

பொருட்பொருளார புன்னலந்தோயார் அருட்
ளாயு மறிவி னவர். [பொரு 4

பொதுநலத்தார் புன்னலந்தோயார் மதி
மாண்ட வறிவி னவா. [நலத்தின் 5

தந்நலம் பாரிப்பார தோயார தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள. 6

நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள். 7

ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு. 8

வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையி
பூரியர்க ளாழு மளறு. [லா 9

இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு. 10

92

## 93. கள்ளுண்ணாமை

உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங்
கட்காதல் கொண்டொழுகு வார். 1

உண்ணற்க கள்ளை உணிலுண்க சான்றோரா னெண்ணப்
படவேண்டா தார். 2

ஈன்றாள் முகத்தேயு மின்னாதா லென்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி. 3

நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளெனும் பேணாப்
பெருங்குற்றத் தார்க்கு. [ன்னும் 4 கையறி யாமை

யுடைத்தே பொருள்கொடுத்து மெய்யறி யாமை கொளல். 5

துஞ்சினார் செத்தாரின் வேறல்ல ரெஞ்ஞான்று
நஞ்சுண்பார் கள்ளுண் பவர். 6

உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவ ரெஞ்ஞான்றுங் கள்ளொ
ற்றிக் கண்சாய் பவர். [றுங் 7 களித்தறியே

னென்பது கைவிடுக நெஞ்சத்
தொளித்ததூஉ மாங்கே மிகும். 8

களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீ இயற்று. 9

கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்
உள்ளான்கொ லுண்டதன் சோர்வு. [கால் 10

93

## 94. சூது.

வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று. [உங் 1

ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்
நன்றெய்தி வாழ்வதோ ராறு. [கொ 2

உருளாயம் மோவாது கூறிற பொருளாயம்
போஒய்ப் புறமே படும். 3

சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில். 4

கவறுங் கழகமுங் கையுந் தருக்கி
யிவறியா ரில்லாகி யார். 5

அகடாரா ரல்ல லுழப்பர்சூ தென்னு
முகடியான் மூடப்பட் டார். 6

பழகிய செல்வமும் பண்புங் கெடுக்குங்
கழகத்துக் காலை புகின். 7

பொருள்கெடுத்துப் பொய்மேற்கொளீஇ யருள்
அல்ல லுழப்பிக்குஞ் சூது. [கெடுத் 8

உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்து
மடையாவா மாயங்கொளின். 9

இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்
முழத்தொறூஉங் காதற் றுயிர். [ப 10

94

## 95. மருந்து

மிகினுங் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று. 1

மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின். 2

அற்றா லளவறிந் துண்க அஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு. 3

அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து. 4

மாறுபா டில்லாத உண்டி மறுத்துண்ணின்
ஊறுபா டில்லை யுயிர்க்கு. 5

இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்குங்
கழிபே ரிரையான்க ணோய். 6

தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோயள வின்றிப் படும். 7

நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல். 8

உற்றா னளவும் பிணியளவுங் காலமுங்
கற்றான் கருதிச் செயல். 9

உற்றவன் றீர்ப்பான் மருந்துழைச் செல்வா னென்
றப்பானாற் கூற்றே மருந்து. 10



## 96. குடிமை

இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு. 1

ஒழுக்கமும் வாய்மையும் நாணுமிம் மூன்று
மிழுக்கார் குடிப்பிறந் தார். 2

நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு. 3

அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலா. 4

வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லின்று. 5

சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்துமென் பார். 6

குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து. 7

நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்
குலத்தின்க ணையப் படும். 8

நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல். 9

நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்
வேண்டுக யார்க்கும் பணிவு. [வேண்டின் 10

96

## 97. மானம்.

இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்
குன்ற வருப விடல். 1

சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர். 2

பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டு முயர்வு. 3

தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை. 4

குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின். 5

புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதா லென்மற்
றிகழ்வார்பின் சென்று நிலை. 6

ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்
கெட்டா னெனப்படுத னன்று [நிலையே 7

மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்
பீடழிய வந்த விடத்து. [தகைமை 8

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா
ருயிர்நீப்பர் மானம் வரின். 9

இளிவரின் வாழாத மான முடையா
ரொளிதொழு தேத்து முலகு. 10

97

## 98. பெருமை.

ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொரு
கஃதிறந்து வாழ்து மெனல். [வற் 1

பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்
செய்தொழில் வேற்றுமை யான். [பொவ்வா 2

மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர். 3

ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு. 4

பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி
னருமை யுடைய செயல். 5

சிறியா ருணர்ச்சியு ளில்லை பெரியாரைப்
பேணிக்கொள் வேமென்னு நோக்கு. 6

இறப்பே புரிந்த தொழிற்றாஞ் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின். 7

பணியுமா மென்றும் பெருமை சிறுமை
அணியுமாந் தன்னை வியந்து. 8

பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல். 9

அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும். 10

98

## 99. சான்றாண்மை

கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து

சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு. 1

குணநலஞ் சான்றோர் நலனே பிறநல
மெந்நலத் துள்ளதூஉ மன்று. 2

அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மை
டைந்துசால் பூன்றிய தூண். [யொ 3

கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு. 4

ஆற்றுவா ராற்றல் பணித லதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை. 5

சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல். 6

இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு. 7

இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின். 8

ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படு வார். 9

சான்றவர் சான்றாண்மை குன்றி னிருநிலந்தான்
றாங்காது மன்னோ பொறை. 10



## 100. பண்புடைமை

எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு. 1

அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்
பண்புடைமை யென்னும் வழக்கு. [டும் 2

உறுப்பொத்தன் மக்களொப் பன்றால் வெறுத்
பண்பொத்த லொப்பதா மொப்பு. [தக்க 3

நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு 4

நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு. 5

பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேன்
மண்புக்கு மாய்வது மன். 6

அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர். 7

நண்பாற்று ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்று ராதல் கடை. 6

நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள். 9

பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வ நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று. 10



## 101. நன்றியில் செல்வம்

வைத்தான்வாய் சான்ற பெரும்பொரு ளஃ
தெதுதான் செயக்கிடந்த தில். [துன்னுன் 1

பொருளானு மெல்லாமென் றீயா திவறு
மருளானு மாணாப் பிறப்பு. 2

ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
தோற்ற நிலக்குப் பொறை. 3

எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ
னச்சப் படாஅ தவன். [ஒருவரா 4

கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்
கோடியுண் டாயினு மில். [கிய 5

ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்
கீத லியல்பிலா தான். [கொன் 6

அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வம் மிகநலம்
பெற்றா டமியண்மூத் தற்று. 7

நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று. 8

அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர். 9

சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து. 10

101

# 102. நாணுடைமை.

கருமத்தா னாணுத னாணுத் திருநுதன்
னல்லவர் நாணுப் பிற. 1

ஊணுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு. 2

ஊனைக் குறித்த உயிரெல்லாம் நாணென்னும்
நன்மை குறித்தது சால்பு. 3

அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்கஃ
பிணியன்றோ பீடு நடை. [தின்றேற் 4

பிறர்பழியுந் தம்பழியும் நாணுவார் நாணுக்
குறைபதி யென்னு முலகு. 5

நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலா மேலா யவர். 6

நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டா
னாண்டுறவார் நாணாள் பவர். 7

பிறர்நாணத் தக்கது தானாணா னாயின்
அறநாணத் தக்க துடைத்து. 8

குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடும்
நாணின்மை நின்றக் கடை. 9

நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
நாணா லுயிர்மருட்டி யற்று. 10

102

## 103. குடிசெயல்வகை.

கருமஞ் செயவொருவன் கைதூவே னென்னும்
பெருமையிற் பீடுடைய தில. 1

ஆள்வினையு மான்ற வறிவு மெனவிரண்டி
னீள்வினையா னீளுங் குடி. 2

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும். 3

சூழாமற் றானே முடிவெய்துந் தங்குடியைத்
தாழா துஞற்று பவர்க்கு. 4

குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று முலகு. 5

நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்
இல்லாண்மை யாக்கிக் கொளல். [த 6

அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்து
மாற்றுவார் மேற்றே பொறை. 7

குடிசெய்வார்க் கில்லை பருவம் மடிசெய்து
மானங் கருதக் கெடும். 8

இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும
குற்ற மறைப்பா னுடம்பு. [பத்தைக் 9

இடுக்கண்கால் கொன்றிட வீழும் அடுத்தூன்று
நல்லா ளிலாத குடி. 10



## 104. உழவு.

சுழன்றுமேர்ப் பின்ன துலகம் அதனால்
உழந்து முழவே தலை. 1

உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்றா
தெழுவாரை யெல்லாம் பொறுத்து. 2 உழுதுண்டு

வாழுவாரே வாழுவாமற் றெல்லாந் தொழுதுண்டு
பின்செல பவா. 3 பலகுடை நீழலுந்
தங்குடைக்கீழக் காண்ப
பலகுடை நீழ லவர். 4 இரவா ரிர
ப்பாக்கொன் றீவா கரவாது
கைசெய்தூண் மாலை யவா. 5

உழவினா கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமென் பாாக்கு நிலை. 6

தொடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும. 7

ஏரினு நன்றா லெருவிடுதல் கட்டபின்
நீரினு நன்றதன் காப்பு. 8

செல்லான் கிழவ னிருப்பின் நிலம்புலந்
தில்லாளி னூடி விடும். 9

இலமென் றசைஇ யிருப்பாரைக் காணின்
நிலமென்னும் நல்லாள நகும். 10



## 105. நல்குரவு

இன்மையி னின்னாத தியாதெனின் இன்மையி
னின்மையே யின்னா தது. 1

இன்மை யெனவொரு பாவி மறுமையு
மிம்மையு மின்றி வரும். 2

தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக
நல்குர வென்னும் நசை. 3

இற்பிறந்தார் கண்ணேயு மின்மை இளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும். 4

நல்குர வென்னு மிடும்பையுட் பல்குறைத்
துன்பங்கள் சென்று படும். 5

நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும். 6

அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும். 7

இன்றும் வருவது கொல்லோ நெருநலுங்
கொன்றது போலு நிரப்பு. 8

நெருப்பினுட் டுஞ்சலு மாகும் நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா டரிது. 9

துப்புர வில்லார் துவரத் துறவாமை
உப்பிற்குங் காடிக்குங் கூற்று. 10



## 106. இரவு

இரக்க இரத்தக்கார் காணிற் கரப்பி
னவர்பழி தம்பழி யன்று. 1

இன்ப மொருவற் கிரத்தல் இரந்தவை
துன்ப முறூஅ வரின். 2

கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்
றிரப்புமோ ரேஎ ருடைத்து. 3

இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவிலுந் தேற்றாதார் மாட்டு. 4

கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
றிரப்பவர் மேற்கொள் வது. 5

கரப்பிடும்பை யில்லாரைக் காணி னிரப்பி
யெல்லா மொருங்கு கெடும். [டும்பை 6

இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்
துள்ள முவப்ப துடைத்து. [துள்ள 7

இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்று. 8

ஈவார்க ணென்னுண்டாந் தோற்ற மிரந்து
மேவா ரிலாஅக் கடை. [கோண் 9

இரப்பான் வெகுளாமை வேண்டு நிரப்பி
தானேயுஞ் சாலுங் கரி. [டும்பை 10



## 107. இரவச்சம்.

கரவா துவந்தியுங் கண்ணன்னா கண்ணும்
இரவாமை கோடி யுறும். 1

இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக உலகியற்றி யான். 2

இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்ட தில். 3

இடமெல்லாங் கொள்ளாத் தகைத்தே இட
காலு மிரவொல்லாச் சால்பு. [மில்லாக் 4

தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த
துண்ணலி னூங்கினிய தில். 5

ஆவிற்கு நீரென் றிரப்பினும் நாவிற்
கிரவி னிளிவந்த தில். 6

இரப்பனிரப்பாரை யெல்லாம் இரப்பிற்
கரப்பா ரிரவன்மி னென்று. 7

இரவென்னு மேமாப்பி றோணி கரவென்னும்
பாறாதாக்கப் பக்கு விடும். 8

இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள
உள்ளதூஉ மின்றிக் கெடும். 9

கரப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ
சொல்லாடப் போஒ முயிர். [இரப்பவர் 10

107

# 108. கயமை.

மக்களே போல்வர் கயவ ரவரன்ன

ஒப்பாரி யாங்கண்ட தில்.

நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்.

தேவ ரனையர் கயவ ரவருந்தா
மேவன செய்தொழுக லான்.

அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ்.

அச்சமே கீழ்கள தாசார மெச்சம்
அவாவுண்டே லுண்டாஞ் சிறிது.

அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான்.

ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு. 7

சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்பு
கொல்லப் பயன்படுங் கீழ். [போற 8

உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல்
வடுக்காண வற்றாகுங் கீழ். 9

எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து. 10

1
2
3
4
5
6

# திருக்குறள்

## காமத்துப்பால்

| இயல்கள்: | அதிகாரம்: |
| --- | --- |
| *களவியல்* | 109—115 |
| *கற்பியல்* | 116—133 |

### 109. தகையணங்குறுத்தல்.

*அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்*
*மாதர்கொல் மாலுமென் னெஞ்சு.* [குழை 1

நோக்கினு ளோக்கெதிர் நோக்குத ருக்கணங்கு
தானைக்கொண் டன்ன துடைத்து. 2

பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு. [தேன் 3

கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்
பேதைக் கமர்த்தன கண். [டகைப் 4

கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கமிம் மூன்று முடைத்து. 5

கொடும்புருவங் கோடா மறைப்பின் நடுங்கஞர்
செய்யல மன்னிவள் கண். 6

கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர்
படாஅ முலைமேற் றுகில். 7

ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரு முட்குமென் பீடு. 8

பிணையேர் மடநோக்கும் நாணு முடையாட்
கணியெவனோ ஏதில தந்து. 9

உண்டார்க ணல்ல தடுநறுக் காமம்போற்
கண்டார் மகிழ்செய்த லின்று. 10



## 110. குறிப்பறிதல்.

இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து. 1

கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற்
செம்பாக மன்று பெரிது. 2

நோக்கினா ணோக்கி யிறைஞ்சினாள் அஃதவள்
யாப்பினு ளட்டிய நீர். 3

யானோக்குங் காலை நிலனோக்கும் நோக்காக்காற்
றானோக்கி மெல்ல நகும். 4

குறிக்கொண்டு நோக்காமை யல்லால் ஒருகண்
சிறக்கணித்தாள் போல நகும். 5

உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொல்
ஒல்லை யுணரப் படும். 6

செறாஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ னோக்
உறாஅர்போன் றுற்றார் குறிப்பு. [கும் 7

அசையியற் குண்டாண்டோ ரேஎயா னோக்
பசையினள் பைய நகும். [கப் 8

ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே யுள. 9

கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்
என்ன பயனு மில. [சொற்கள 10

## 111. புணர்ச்சிமகிழ்தல்.

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள. 1

பிணிக்கு மருந்து பிறம னணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து. 2

தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொல்
தாமரைக் கண்ணா னுலகு. 3

நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்
தீயாண்டுப் பெற்றா ளிவள். 4

வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினா டோள். 5

உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்
கமிழ்தி னியன்றன தோள். 6

தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு. 7

வீழு மிருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு. 8

ஊட லுணர்தல் புணர்த லிவைகாமங்
கூடியார் பெற்ற பயன். 9

அறிதோ றறியாமை கண்டற்றூற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு. 10

111

## 112. நலம்புனைந்துரைத்தல்.

நன்னீரை வாழி யனிச்சமே நின்னினும்
மென்னீரள யாம்வீழ் பவள். 1

மலர்காணின் மையாத்தி நெஞ்சே இவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று. 2

முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு. 3

காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கும்
மாணிழை கண்ணொவ்வே மென்று. 4

அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்
நல்ல படாஅ பறை. [பிற்கு 5

மதியும் மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன். 6

அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து. 7

மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி. 8

மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயிற்
பலர்காணத் தோன்றன் மதி. 9

அனிச்சமு மன்னத்தின் றூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம். 10

112

## 113. காதற்சிறப்புரைத்தல்

பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர். 1

உடம்பொ டுயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு. 2

கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழுந்
திருநுதற் கில்லை யிடம். 3

வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத
லதற்கன்ன ணீங்கு மிடத்து. 4

உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியே
னொள்ளமர்க் கண்ணாள் குணம். 5

கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற் பருவரார்
நுண்ணியரெங் காத லவர். 6

கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணு
மெழுதேங் கரப்பாக் கறிந்து. 7

நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்ட
லஞ்சுதும் வேபாக் கறிந்து. 8

இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே
ஏதில ரென்னுமிவ் வூர். 9

உவந்துறைவ ருள்ளத்து ளென்று மிகந்துறைவ
ரேதில ரென்னுமிவ் வூர். 10

## 113

## 114. நாணுத்துறவுரைத்தல்

காம முழந்து வருந்தினார்க் கேம
மடலல்ல தில்லை வலி. 1

நோனா உடம்பு முயிரும் மடலேறும்
நாணினை நீக்கி நிறுத்து. 2

நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்று
காமுற்றா ரேறும் மடல். [டையேன் 3

காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை! 4

தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை யுழக்குந் துயா. 5

மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற
படலொல்லா பேதைக்கென் கண். 6

கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில். 7

நிறையரியர் மன்னளிய ரென்னாது காமம்
மறையிறந்து மன்று படும். 8

அறிகிலா ரெல்லாரு மென்றேயென் காமம்
மறுகின் மறுகு மருண்டு. 9

யாங்கண்ணிற் காண நகுப அறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு. 10

## 114

--

## 115. அலரறிவுறுத்தல்.

அலரெழ ஆருயிர் நிற்கு மதனைப்
பலரறியார் பாக்கியத் தால். 1

மலரன்ன கண்ணா ளருமை யறியா
தலரெமக் கீந்ததிவ் வூர். 2

உறுஅதோ வூரறிந்த கௌவை யதனைப்
பெறுஅது பெற்றன்ன நீர்த்து. 3

கவ்வையாற் கவ்விது காமம அதுவின்றேற்
றவ்வென்னுந் தன்மை யிழந்து. 4

களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்
வெளிப்படுந் தோறு மினிது. 5

கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று. 6

ஊரவா கௌவை எருவாக அன்னைசொன்
னீராக நீளுமிந் நோய். 7

நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற கௌவை
காமம் நுதுப்பே மெனல். [யாற் 8

அலாநாண ஒல்வதோ அஞ்சலோம் பென்றா
பலாநாண நீத்தக் கடை. 9

தாம் வேண்டி னல்குவர் காதலா யாம்வேண்டுங்
கௌவை யெடுக்குமிவ் வூா. 10



## 116. பிரிவாற்றாமை.

செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை. 1

இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்க ணுடைத்தாற் புணர்வு. 2

அரிதரோ தேற்ற மறிவுடையா ா கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான். 3

அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற்
றேறியார்க் குண்டோ தவறு. 4

ஓம்பி னமைந்தார் பிரிவோம்பல் மற்றவர்
நீங்கி னரிதாற் புணர்வு. 5

பிரிவுரைக்கும் வன்கண்ண ராயின் அரிதவர்
நல்குவ ரென்னும் நசை. 6

துறைவன் றுறந்தமை தூற்றுகொன் முன்கை
யிறையிறவா நின்ற வளை. 7

இன்னு தினனில்லூா வாழுதல் அதனினு
மின்னு தினியார்ப் பிரிவு. 8

தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ. 9

அரிதாற்றி யல்லனோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர். 10

116

# 117. படர்மெலிந்திரங்கல்

மறைப்பேன்மன் யானிஃதோ நோயை இறைப்
கூற்றுநீர் போல மிகும். [பவர்க் 1

கரத்தலு மாற்றேனிந் நோயைநோய் செய்தார்க்
குரைத்தலு நாணுத் தரும். 2

காமமும் நாணு முயிர்காவாத் தூங்குமென்
னேனை வுடம்பி னகத்து. 3

காமக் கடன்மன்னு முண்டே யதுநீந்தும்
ஏமப் புணைமன்னு மில். 4

துப்பி னெவனுவர் மற்கொ றுயர்வரவு
நட்பினு ளாற்று பவர். 5

இன்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்கால்
றுன்ப மதனிற் பெரிது. 6

காமக் கடும்புன னீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே யுளேன். 7

மன்னுயி ரெல்லாந் துயிற்றி அளித்திரா
என்னல்ல தில்லை துணை. 8

கொடியார் கொடுமையிற் றங்கொடிய இந்நாள்
நெடிய கழியு மிரா. 9

உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின் வெள்
நீந்தல மன்னோவென் கண். [ளநீர் 10

117

## 118. கண்விதுப்பழிதல்

கண்டாங் கலுழ்வ தெவன்கொலோ தண்டா
தாங்காட்ட யாங்கண் டது. [நோய்

தெரிந்துணரா நோக்கிய உண்கண் பரிந்துணை
பைதல் உழப்ப தெவன். [ராய் 2

கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழு
மிதுநகத் தக்க துடைத்து. 3

பெயலாற்றா நீருலந்த உண்கண் உயலாற்றா
உய்விலநோ யென்க ணிறுத்து. 4

படலாற்றா பைதல் உழக்குங் கடலாற்றாக்
காமநோய் செய்தவென் கண். 5

ஓஒ வினிதே யெமக்கிநநோய் செய்தகண்
தாஅ மிதற்பட் டது. 6

உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழைந்து
வேண்டி யவர்க்கண்ட கண். 7

பேணாது பெட்டா ருளர்மன்னோ மற்றவர்க்
காணா தமைவில கண். 8

வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை
யாரஞ ருற்றன கண். 9

மறைபெற லூராக் கரிதன்றா லெம்போ
லறைபறை கண்ணா ரகத்து. 10

118

## 119. பசப்புறுபருவரல்.

நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்த
பண்பியார்க் குரைக்கோ பிற. [வென் 1

அவர்தந்தா ரென்னுந் தகையா லிவர்தந்தென்
மேனிமே லூரும் பசப்பு. 2

சாயலும் நாணு மவர்கொண்டார் கைம்மாறா
நோயும் பசலையுந் தந்து. 3

உள்ளுவன் மன்யா னுரைப்ப தவாதிறமாற்

கள்ளம் பிறவோ பசப்பு. 4

உவக்காணெங் காதலர் செல்வா ரிவக்காணென்
மேனி பசப்பூ ரவது. 5

விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு. 6

புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வ
லளளிக்கொள வற்றே பசப்பு. [ளவி 7

பசந்தா ளிவளென்ப தல்லால் இவளைத்
துறந்தா ரவரென்பா ரில். 8

பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலைய ராவ ரெனின். 9

பசப்பெனப் பேர்பெறுத னன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்று ரெனின். 10



## 120. தனிப்படர்மிகுதி.

தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றரே
காமத்துக் காழில் கனி. 1

வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வா ரளிக்கு மளி. 2

வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே
வாழுந மென்னுஞ் செருக்கு. 3

வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅ ரெனின். 4

நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்ப
தாங்காதல் கொள்ளாக் கடை. [வோ 5

ஒருதலையா னின்னாது காமங்காப் போல
இருதலை யானு மினிது. 6

பருவரலும் பைதலுங் காணான்கொல் காமன்
ஒருவர்க ணின்றொழுகு வான். 7

வீழ்வாரி னின்சொற் பெறாஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணா ரில். 8

நசைஇயார் நல்கா ரெனினும் அவர்மாட்
டிசையு மினிய செவிக்கு. 9

உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறாஅ அய் வாழிய நெஞ்சு. 10



## 121. நினைந்தவர்புலம்பல்

உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலாற்
கள்ளினுங் காம மினிது. 1

எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம்வீழ்வார்
நினைப்ப வருவதொன் றில். 2

நினைப்பவர் போன்று நினையார்கொ றும்மல்
சினைப்பது போன்று கெடும். 3

யாமு முளேங்கொ லவர்நெஞ்சத் தெம்நெஞ்சத்
தோஒ உளரே யவர். 4

தந்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்
லெந்நெஞ்சத் தோவா வரல். [கொ 5

மற்றியா னென்னுளேன் மன்னோ வவரொடியா
னுற்றநா ளுள்ள வுளேன். 6

மறப்பி னெவனாவன் மற்கொன் மறப்பறியே
னுள்ளினு முள்ளஞ் சுடும். 7

எனைத்து நினைப்பினுங் காயா ரனைத்தன்றோ
காதலர் செய்யுஞ் சிறப்பு. 8

விளியுமெ னின்னுயிர் வேறல்ல மென்பா
ரளியின்மை யாற்ற நினைந்து. 9

விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்
படாஅதி வாழி மதி. 10

121

## 122. கனவுநிலையுரைத்தல்

காதலர் தூதொடு வந்த கனவினுக்
கியாதுசெய் வேன்கொல் விருந்து. 1

கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க்
குயலுண்மை சாற்றுவேன் மன். 2

நனவினா னல்கா தவரைக் கனவினாற்
காண்டலி னுண்டென் னுயிர். 3

கனவினா னுண்டாகுங் காமம் நனவினான்
நல்காரை நாடித் தரற்கு. 4

நனவினாற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே யினிது. 5

நனவென ஒன்றில்லை யாயிற் கனவினாற்
காதலர் நீங்கலர் மன். 6

நனவினா னல்காக் கொடியார் கனவினான்
என்னெம்மைப் பீழிப் பது. 7

துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கால்
நெஞ்சத்த ராவர் விரைந்து. 8

நனவினா னல்காரை நோவர் கனவினாற்
காதலர்க் காணா தவர். 9

நனவினா னந்நீத்தா ரென்பர் கனவினாற்
காணார்கொ லிவ்வூ ரவர். 10



## 123. பொழுதுகண்டிரங்கல்.

மாலையோ வல்லை மணந்தா ருயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது. 1

புன்கண்ணை வாழி மருண்மாலை எங்கேள்போல்
வன்கண்ண தோநின் றுணை. 2

பனியரும்பிப் பைதல்கொண் மாலை துனியரும்
துன்பம் வளர வரும். [பித் 3

காதல ரில்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும். 4

காலைக்குச் செய்தநன் றென்கொ லெவன்கொல்
மாலைக்குச் செய்த பகை. [யான் 5

மாலைநோய் செய்தன் மணந்தா ரகலாத
காலை யறிந்த திலேன். 6

காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய். 7

அழல்போலும் மாலைக்குத் தூதாகி யாயன்
குழல்போலுங் கொல்லும் படை. 8

பதிமருண்டு பைத லுழக்கும் மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து. 9

பொருண்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை
மாயுமென் மாயா வுயிர், 10

## 123

## 124. உறுப்புநலனழிதல்.

சிறுமை நமக்கொழியச் சேட்சென்ற ருள்ளி
நறுமலர் நாணின கண். 1

நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாருங் கண். 2

தணந்தமை சால அறிவிப்ப போலும்
மணந்தநாள் வீங்கிய தோள். 3

பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள். 4

கொடியார் கொடுமை யுரைக்குந் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள். 5

தொடியொடு தோணெகிழ நோவ லவரைக்
கொடிய ரெனக்கூற னொந்து. 6

பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்
வாடுதோட் பூச லுரைத்து. 7

முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல். 8

முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண். 9

கண்ணின் பசப்போ பருவர லெய்தின்றே
ஒண்ணுதல் செய்தது கண்டு. 10

## 124

## 125. நெஞ்சொடுகிளத்தல்.

நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சேயெனைத்
எவ்வநோய் தீர்க்கும் மருந்து. [தொன்றும் 1

காத லவரில ராகநீ நோவது
பேதைமை வாழியென் னெஞ்சு. 2

இருந்துள்ளி யென்பரிதல் நெஞ்சே பரிந்துள்
பைதனோய் செய்தார் கணில். [ளல் 3

கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே இவையென்
தின்னு மவர்க்காண லுற்று. [னைத் 4

செற்றா ரெனக்கை விடலுண்டோ நெஞ்சேயா
முற்றா லுறாஅ தவர். 5

கலந்துணர்த்துங் காதலர்க் கண்டாற் புலந்துணா
பொய்க்காய்வு காய்திியென் னெஞ்சு. [ராய் 6

காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேனிவ் விரண்டு. 7

பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதையென் னெஞ்சு. 8

உள்ளத்தார் காத லவராக உள்ளிநீ
யாருழைச் சேறியென் னெஞ்சு 9

துன்னாத் துறந்தாரை நெஞ்சத் துடையேமா
இன்னு மிழத்துங் கவின். 10



## 126. நிறையழிதல்.

காமக் கணிச்சி யுடைக்கும் நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு. 1

காம மெனவொன்றோ கண்ணின்றென் னெஞ்
யாமத்து மாளுந் தொழில். [சத்தை 2

மறைப்பேன்மற் காமத்தை யானோ குறிப்பின்
தும்மல்போற் றோன்றி விடும். [றித் 3

நிறையுடையே னென்பேன்மன் யானோவென்
மறையிறந்து மன்று படும். [காமம் 4

செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை
யுற்றா ரறிவதொன் றன்று. [காமநோ 5

செற்றவர் பின்சேறல் வேண்டி யளித்தரோ
வெற்றென்னை யுற்ற துயர். 6

நாணென வொன்றோ வறியலங் காமத்தாற்
பேணியார் பெட்பசெயின். 7

பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை. 8

புலப்ப லெனச்சென்றேன் புல்லினேன் நெஞ்
கலத்த லுறுவது கண்டு. [சங் 9

நிணந்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ
புணர்ந்தூடி நிற்பே மெனல். 10

126

## 127. அவர்வயின்விதும்பல்.

வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல். 1

இலங்கிழா யின்று மறப்பினென் றோண்மேற்
கலங்கழியுங் காரிகை நீத்து. 2

உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்
வரனசைஇ யின்னு முளேன். 3

கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகொ டேறுமென் னெஞ்சு. 4

காண்கமற் கொண்கனைக் கண்ணாரக் கண்டபின்
நீங்குமென் மென்றோட் பசப்பு. 5

வருகமற் கொண்க னொருநாட் பருகுவன்
பைதனோ யெல்லாங் கெட. 6

புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்
கண்ணன்ன கேளிர் வரின். [பேன்கொல் 7

வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை யயர்கம் விருந்து. 8.

ஒருநா ளெழுநாள்போற் செல்லுஞ்சேட் சென்
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு. [றார் 9

பெறினென்னாம் பெற்றக்கா லென்னா முறி
முள்ள முடைந்துக்கக் கால். [னென்னா 10

## 128. குறிப்பறிவுறுத்தல்.

கரப்பினுங் கையிகந் தொல்லாநின் னுண்கண்
ணுரைக்க லுறுவதொன் றுண்டு. 1

கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது. 2

மணியிற் றிகழ்தரு நூல்போன் மடந்தை
அணியிற் றிகழ்வதொன் றுண்டு. 3

முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை
நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு. 4

செறிதொடி செய்திறந்த கள்ளம் உறுதுயர்
தீர்க்கு மருந்தொன் றுடைத்து. 5

பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி
அன்பின்மை சூழ்வ துடைத்து. 6

தண்ணந் துறைவன் றணந்தமை நம்மினும்
முன்ன முணர்ந்த வளை. 7

நெருநற்றுச் சென்றாரெங் காதலா யாமு
மெழுநாளே மேனி பசந்து. 8

தொடிநோக்கி மென்றோளும் நோக்கி யடிநோக்கி
யஃதாண் டவள்செய் தது. 9

பெண்ணினிற் பெண்மை யுடைத்தென்ப கண்ணினாற்
காமநோய் சொல்லி யிரவு. 10

# 129. புணர்ச்சிவிதும்பல்.

உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு. 1

தினைத்துணையு மூடாமைவேண்டும் பனைத்துணை
காமம் நிறைய வரின். [யுங் 2

பேணாது பெட்பவே செய்யினுங் கொண்
காணா தமையல கண். [கனைக் 3

ஊடற்கட் சென்றேன்மற் றோழி யதுமறந்து
கூடற்கட் சென்றதென் னெஞ்சு. 4

எழுதுங்காற் கோல்காணாக் கண்ணேபோற்
பழிகாணேன் கண்ட விடத்து. [கொண்கன் 5

காணுங்காற் காணே றவறாய காணாக்காற்
காணேன் றவறல் லவை. 6

உய்த்த லறிந்து புனல்பாய் பவரேபோற்
பொய்த்த லறிந்தென் புலந்து. 7

இளித்தக்க இன்னா செயினுங் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு. 8

மலரினும் மெல்லிது காமஞ் சிலரதன்
செவ்வி தலைப்படுவார். 9

கண்ணிற் றுணித்தே கலங்கினள் புல்லுத
லென்னினுந் தான்விதுப் புற்று. 10



## 130. நெஞ்சொடுபுலத்தல்.

அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே
நீயெமக் காகா தது. 1

உறாஅ தவர்க்கண்ட கண்ணும் அவரைச்
செறாஅரெனச் சேறியென் னெஞ்சு. 2

கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ
பெட்டாங் கவர்பின் செலல். 3

இனியன்ன நின்னொடு சூழ்வார் யாா நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று. 4

பெறாஅமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சும்
அறாஅ விடும்பைத்தென் னெஞ்சு. 5

தனியே யிருந்து நினைத்தக்கா லென்னைத்
தினிய விருந்ததென் னெஞ்சு. 6

நாணு மறந்தே னவர்மறக் கல்லாவென்
மாணா மடநெஞ்சிற் பட்டு. 7

எள்ளி னிளிவாமென் றெண்ணி அவர்திற
முள்ளு முயிர்க்காத னெஞ்சு. 8

துன்பத்திற் கியாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சம் துணையல் வழி. 9

தஞ்சந் தமரல்ல ரேதிலார் தாமுடைய
நெஞ்சந் தமரல் வழி. 10

## 131. புலவி.

புல்லா திராஅப் புலத்தை யவருறு
மல்லனோய் காண்கஞ் சிறிது.
உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றா னீள விடல்

# 2

அலந்தாரை யல்லனோய் செய்தற்றாற் றம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல். 3

ஊடி யவரை யுணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று. 4

நலத்தகை நல்லவர்க் கேஎர் புலத்தகை
பூவன்ன கண்ணா ரகத்து. 5

துனியும் புலவியு மில்லாயிற் காமங்
கனியுங் கருக்காயு மற்று. 6

ஊடலி னுண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவ தன்றுகொ லென்று. 7

நோத லெவன்மற்று நொந்தாரென் றஃதறியுங்
காதல ரில்லா வழி. 8

நீரும் நிழல தினிதே புலவியும்
வீழுநர் கண்ணே யினிது. 9

ஊட லுணங்க விடுவாரோ டென்னெஞ்சங்
கூடுவே மென்ப தவா. 10

# 132. புலவி நுணுக்கம்.

பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு. 1

ஊடியிருந்தோமாத் தும்மினார் யாந்தம்மை
நீடுவாழ் கென்பாக் கறிந்து. 2

கோட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்தியைக்
காட்டிய சூடினீ ரென்று. 3

யாரினுங் காதல மென்றேனா வூடினாள்
யாரினும் யாரினு மென்று. 4

இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள். 5

உள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீ ரென்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள். 6

வழுத்தினா டும்மினே னாக அழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீ ரென்று. 7

தும்மச் செறுப்ப அழுதாள் நுமருள்ளல்
எம்மை மறைத்திரோ வென்று. 8

தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீர்
இந்நீர ராகுதி ரென்று. 9

நினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீ ரென்று. 10

## 133. ஊடலுவகை.

இல்லை தவறவர்க் காயினு மூடுதல்
வல்ல தவரளிக்கு மாறு. 1

ஊடலிற் றோன்றுஞ் சிறு துனி நல்லளி
வாடினும் பாடு பெறும். 2

புலத்தலிற் புத்தேணா டுண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்ன ரகத்து. 3

புல்லி விடாஅப் புலவியுட் டோன்றுமென்
னுள்ள முடைக்கும் படை. 4

தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்றோ
ளகறலி னுங்கொன் றுடைத்து. 5

உணலினு முண்ட தறலினிது காமம்
புணர்தலி னூட லினிது. 6

ஊடலிற் றோற்றவ ரென்று ரதுமன்னுங்
கூடலிற் காணப் படும். 7

ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலிற் றோன்றிய வுப்பு. 8

ஊடுக மன்னோ ஒளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ விரா. 8

ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின். 10



# திருக்குறள்

முற்றிற்று.

## கல்லாடர்

ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனி
னன்றென்ப வாறு சமயத்தார்-நன்றென
வெப்பா லவரு மியைபவே வள்ளுவனார்
முப்பால் மொழிந்த மொழி,

## அரிசில்கிழார்

பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு
தெரிந்து திறந்தொறுஞ் சேரச்-சுருங்கச்
சொல்லால் விரித்துப் பொருள்விளங்கச் சொல்
வல்லாரார் வள்ளுவரல் லால். [லுதல் 2

## நத்தத்தனார்

ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தி னோடுபகர்ந்ததற்பின்-போயொருத்தர்
வாய்க்கேட்க நூலுளவோ மன்னு தமிழ்ப்புலவ
ராய்க்கேட்க வீற்றிருக்க லாம். 3

## மாங்குடிமருதனார்

ஓதற் கெளிதா யுணர்தற் கரிதாகி
வேதப் பொருளாய் மிகவிளங்கத்-தீதற்றோ
ருள்ளுதொறு முள்ளுதொ றுள்ள முருக்குமே
வள்ளுவர் வாய்மொழி மாண்பு. 4

## மதுரைத் தமிழ்நாகனார்

எல்லாப் பொருளு மிதன்பா லுளவிதன்பா
லில்லாத வெப்பொருளு மில்லையாற்-சொல்லாற்

பரந்தபா வாலென் பயன்வள் ளுவனார்
சுரந்தபா வையத் துணை. 5

## உருத்திரசன்மகண்ணர்

மணற்கிளைக்க நீரூறு மைந்தர்கள் வாய்வைத்
துணற்கூறுந் தாய்முலை யொண்பால்-பிணக்
கிலா
வாய்மொழி வள்ளுவர் முப்பான் மதிப்புல
காய்தொறு மூறு மறிவு. [வோர்க் 6

## மதுரையறுவைவாணிகன் இளவேட்டனர்

இன்பமுந் துன்பமு மென்னு மிவையிரண்டு
மன்பதைக் கெல்லா மனமகிழ-வன்பொழியா
தெண்ணி யுணர வுரைத்தாரே யோதுசீர்
வள்ளுவர் வாயுறை வாழ்த்து. 7

## வண்ணக்கஞ் சாத்தனர்

ஆரியமுஞ் செந்தமிழு மாராய்ந் திதனினிது
சீரிய தென்றொன்றைச் செப்பரிதா-லாரியம்

வேத முடைத்து தமிழ்திரு வள்ளுவனு
ரோது குறட்பா வுடைத்து. 8

## கல்லாடர் கிழார்

ஒருவ ரிருகுறளே மூப்பாலி னோது
தரும முதனான்குஞ் சாலு-மருமறைக
ளோதுஞ் சமயநா லாறுநம் வள்ளுவனார்
புந்தி மொழிந்த பொருள். 9

## கவுணியனார்

சிந்தைக் கினிய செவிக்கினிய வாய்க்கினிய
வந்த விருவினைக்கு மாமருந்து - முந்திய
நன்னெறி நாமறிய நாப்புலமை வள்ளுவனார்
பன்னிய வின்குறள்வெண் பா. 10

## கொடிஞாழன் மாணிபூதனார்

அறனறிந்தே மான்ற பொருளறிந்தே மின்பின்
றிறனறிந்தேம் வீடு தெளிந்தே - மறனெறிந்த
வாளார் நெடுமாற வள்ளுவனார் தம்வாயாற்
கேளா தனவெல்லாங் கேட்டு. 11

## தேனீக்குடிக் கீரனார்

பொய்ப்பால் பொய்யேயாய்ப் போயினபொய் [யல்லாத
மெய்ப்பால மெய்யாய் விளங்கினவே - முப்பா [லிற்
றெய்வத் திருவள் ளுவர்செய் தியகுறளால்
வையத்து வாழ்வார் மனத்து, 12



## மதுரைப் பாலாசிரியனார்

வெள்ளி வியாழம் விளங்கிரவி வெண்டிங்கள்
பொள்ளென நீக்கும் புறவிருளைத் - தெள்ளிய
வள்ளுவ ரின்குறள் வெண்பா வகிலத்தோ
ருள்ளிரு ணீக்கு மொளி. 13

## ஆலங்குடிவங்கனர்

வ[illegible]ன்வளமுரைக்கின்வாய்மடுக்குந்
[illegible]சுவையு மொவ்வாதாற்-றெள்
[ளமுத
முண்டறிவார் தேவ ருலகடைய வுண்ணுமால்
வண்டமிழின் முப்பான் மது. 14

## நப்பாலத்தனர்

அறந்தகளி யான்ற பொருடிரி யின்பு
சிறந்தநெய் செஞ்சொற்றீத் தண்டு-குறும்பாவா
வள்ளுவனா ரேற்றினர் வையத்து வாழ்வார்க
ளுள்ளிரு ணீக்கும் விளக்கு. 15

## செயிர்க்காவிரியார்மகனர் சாத்தனர்

ஆவனவு மாகா தனவு மறிவுடையார்
யாவரும் வல்லா ரெடுத்தியம்பத - தேவா
திருவள ளுவர்தாமுஞ் செப்பியவே செய்வார்
பொருவி லொழுக்கம்பூண் டார். 16

## கவிசாகரப் பெருந்தேவனார்

பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச் சாம்புனத
மாவிற் கருமுனியா யானைக் - கமரரும்ப
றேவிற் றிருமா லெனச்சிறந்த தென்பவே
பாவிற்கு வள்ளுவர்வெண் பா. 17

## மதுரைத்தமிழாசிரியர் செங்குன்றூர்கிழார்

புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேற்
சிலவர் புலவரெனச் செப்ப - லிலவு
பிறங்கொளிமா லைக்கும் பெயர்மாலை மற்றுங்
கறங்கிருண்மா லைக்கும் பெயர். 18

## வெள்ளிவீதியார்

செய்யா மொழிக்குந் திருவள் ளுவர்மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே-செய்
வதற்குரிய ரந்தணரே யாராயி னேனை யர்
யிதற்குரிய ரல்லாதா ரில். 19

## ஆசிரியர் நல்லந்துவனார்

சாற்றிய பல்கலையுந் தப்பா வருமறையும்
போற்றி யுரைத்த பொருளெல்லாந்-தோற்றவே
முப்பான் மொழிந்த முதற்பா வலரொப்பா
ரெப்பா வலரினு மில். 20

## முகையலூர்ச் சிறுகருந்தும்பியார்

உள்ளுத லுள்ளி யுரைத்த லுரைத்ததனைத்
தெள்ளுத லன்றே செயற்பால-வள்ளுவனார்
முப்பாலின் மிக்க மொழியுண் டெனப்புகர்வா
ரெப்பா வலரினு மில். 21

## நாகன்றேவனார்

தாளார் மலர்ப்பொய்கை தாங்குடைவார் தண்
வேளா தொழிதல்வியப்பன்று-வாளாதா[ணீரை
மப்பா லொருபாவை யாய்பவோ வள்ளுவனார்
முப்பான் மொழிமூழ்கு வார். 22

## கோதமனார்

ஆற்ற லழியுமென் றந்தணர்க ளான்மறையைப்
போற்றியுரைத் தேட்டின் புறத்தெழுதா-ரேட்
[டெழுதி
வல்லுநரும் வல்லாரும் வள்ளுவனார் முப்பாலைச்
சொல்லிடினு மாற்றலுசோர் வின்று. 23

## இடைக்காடர்

கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்.

## ஔவையார்

அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள். 24

| | |
|---|---|
| அறங்கூறு | 19 |
| அறஞ்சாரா | 105 |
| அறஞ்சொல் | 19 |
| அறத்தாறிது | 4 |
| அறத்தாற்றி | 5 |
| அறத்தான் | 4 |
| அறத்திற்கே | 8 |
| அறத்தினூஉங் | 4 |
| அறம்பொரு | 51 |
| அறவாழி | 1 |
| அறவினையா | 33 |

## பணிக்கு ஒரு சில குறிப்புகள்:—

1. திருக்குறள் என்னும் அரிய தமிழ்மறை தமிழ்மக்கள் அனைவராலும் நன்கு கற்கப்பட்டு வருகின்றதா?

2. தமிழ்நாட்டின் ஒவ்வொரு சிற்றூர்களிலும் திருக்குறள் கழகங்கள், பயிற்சிக்கூடங்கள் அமைக்கும் ஏற்பாடுகளில் ஈடுபட்டுள்ளோமா?

3 தமிழகத்தில் ஒவ்வொரு வீட்டிலும் திருக்குறள் நூல் ஒன்று இருக்க யாது முயற்சி எடுத்துள்ளோம்?

4. திருவள்ளுவர் பிறந்த இந்நாட்டில் நாள் தோறும் குறள் மணம்கமழ **தமிழ்நாட்டு திருக்குறள் இயக்கம்** என்ற முறையில் ஒரு இயக்கம் இருக்கின்றதா?

5. ஆங்கிலம் கற்றுள்ள அனைவரும் திருக்குறள் கல்லாதிருக்கும் குறை அகற்றப்பட்டு விட்டதா?

6. அரசியல் துறையில் அமர்ந்திருக்கும் அனைவரும், வாணிபம் செய்யும் மக்களும் தனிப்பட்ட முயற்சி எடுத்துக்கொண்டால் திருக்குறள் வளர்ச்சிமேம்பாடடைதல் எளிதல்லவா?

7. நகராட்சி மன்றங்கள், நாட்டாண்மைக் கழகங்கள் முதலியன திருக்குறள் வளர்ச்சிக்கு தொண்டுசெய்ய முயற்சிக்கவேண்டுமல்லவா?

# வெளிவந்துள்ள நூல்கள்

## திருக்குறள் முனிசாமி, எழுதியவை



| | |
|---|---|
| வள்ளுவர் காட்டிய வழி | 0—0—6 |
| அவள் சிரித்த சிரிப்பு | 0—2—0 |
| இன்பத்தோட்டம் | 0—2—0 |
| ஏன் இந்த வாழ்வு | 0—2—0 |
| மானத்தை விற்காதே | 0—2—0 |
| இன்பம் இருக்குமிடம் | 0—5—0 |
| இன்பம் தரும் இன்பம் | 0—1—6 |
| வள்ளுவரைக் காணோம் | 0—6—0 |
| வள்ளுவர் ஏன் எழுதினார் | 0—4—0 |
| திருக்குறள் காமத்துப்பால்— முழுதும்—(விளக்கவுரையுடன்) | 0-14—0 |
| காதல் கள்வன் | 0—4—0 |
| காதல் உழவன் | 0—3—0 |
| மயங்கிய நெஞ்சம் | 0—4—0 |
| வள்ளுவனார் உள்ளம் | 0—6—0 |
| திருவள்ளுவர் ஆண்ட மேற்கோள் | 0—4—0 |





உங்கள் தேவைக்கு உடனே எழுதுங்கள் :—

திருக்குறள் அச்சகம் லிமிடெட்.,

கடலூர் [புதுநகர்]